ஹூர் வேத வேதாந்த பாடசாலை டிரஸ்டின் வெளியீடு.

ॐ

# ॥ शारीरकभाष्यसारः ॥

# சாரீரக பாஷ்ய ஸாரம்



பண்டிதராஜ, சாஸ்த்ரரத்னாகர

ஹ்மஸ்ரீ V. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள்

தொகுத்தது.

ழூர் வேத வேதாந்த பாடசாலை டிரஸ்டின் வெளியீடு.

॥ श्रीः ॥

# ॥ शारीरकभाष्यसारः ॥

# சாரீரக பாஷ்ய ஸாரம்

பண்டிதராஜ, சாஸ்த்ரரத்னாகர
ப்ரஹ்மஸ்ரீ V. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள்,
*Recipient of the President & Sahitya Akademy Awards,*
*Reader in Sanskrit (Retd.) Annamalai University,*
*Hony. Professor, Madras Sanskrit College &*
*Director, Samskrit Education Society, Madras)*
அவர்களால் தொகுக்கப்பட்டது.



திருச்சி ஜில்லா பழுவூர்
வேத வேதாந்த பாடசாலை ட்ரஸ்டிலிருந்து
வெளியிடப்பட்டது.

1971

விலை ரூ. 2-00



காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளும்
புது பெரியவர்களும்.

॥ श्रीः ॥

# मुद्रा

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य श्रीमच्छंकर भगवत्पादप्रतिष्ठित श्रीकाञ्चीकामकोटि पीठाधिप जगद्गुरु श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वती श्रीपादादेशानुसारेण श्रीमज्जयेन्द्रसरस्वती श्रीपादैः

शाहजीपुराभिजन शास्त्ररत्नाकर पण्डितराज ब्रह्मश्री सुब्रह्मण्यशास्त्रिविषये क्रियते नारायणस्मृतिः ।

पलुवूरु वेदवेदान्तनिक्षेपसमादरेण भवद्भिरचितप्रवचनसारसंकलनात्मकः शारीरकभाष्यसाराख्योऽयं ग्रन्थः व्यासाचार्यप्रणीतब्रह्मसूत्राणां भगवत्पादभाष्यमनुसृत्य जीवब्रह्मैक्ये तात्पर्यमिति द्राविडभाषायां ललितपदघटितवाक्यैः सम्यक् विशदयति। मोक्षमार्गः प्रपञ्चतत्त्वं जीवब्रह्मस्वरूपं तदैक्यमिति विषयविभागेन तत्तत्स्थलेषु भगवत्पादभाष्यवाक्यानि तदुपष्टम्भकतया न्यायरक्षामणिवेदान्तसूत्रमुक्तावल्यादिग्रन्थवाक्यानि च प्रमाणतया निर्दिशति ।

अयं ग्रन्थः अद्वैतप्रमेयबुभुत्सूनां द्राविडभाषाभिज्ञानां तत्त्वावबोधने भृशमुपकारावहो विद्यते ।

उत्तमपाण्डित्यविषयोपपादनचातुर्यविशिष्टो भवान् पलुवूरु वेदवेदान्तनिक्षेपनिर्वाहकाश्च उपर्युपरि एवमेव उत्तमग्रन्थानां विरचनेन प्रकाशीकरणेन च परमात्मकृपया प्रेयःश्रेयःपरंपराः प्राप्नुयुरित्याशास्महे ।

यात्रास्थानम्-मघूरु, (कर्णाटकप्रदेशः)
विरोधिकृत्पौषशुद्धपूर्णिमा । } नारायणस्मृतिः ।



**P. ராமச்சந்திரய்யர்,**

*(Retd. Dy. Collector)*

திருச்சி ஜில்லா பழூர் வேத வேதாந்தபாடசாலை ஸ்தாபகர்.

# பதிப்புரை

பழுஹூர் ஸ்ரீ P. ராமசந்திரய்யர் அவர்கள் டிப்டி கலெக்டர் உத்தியோகம் பார்த்தவர்கள். மிகவும் உயர்ந்த ஆஸ்திக சிகாமணியாகவும், வேத தர்மங்களில் மிகவும் சிரத்தை உள்ளவராகவும் இருந்து வந்தார்கள். வேத, வேதாந்த சாஸ்திரங்களில் மிகவும் பற்றுள்ளவர்கள். தானும் முறைப்படி வேதாந்த சாஸ்திரம் படித்தவர்கள்.

அவர் வேத தர்மத்தையும், அத்வைத வேதாந்தத்தையும் பிரசாரம் செய்யும் நோக்கத்துடன் பழுஹூரில், வேதாந்த பாடசாலையையும் பிறகு வேத பாடசாலையையும் சிறுகமணியில் ஆயுர் வேத ஆஸ்பத்திரியையும், மற்றும் சில தர்மங்களையும் ஏற்படுத்தி 15—7—36ல் ஒரு உயில் மூலமும் 31—1–38ல் ஒரு codicil மூலமும் தன் சொத்துக்களை (மூன்று கிராமங்களிலுள்ள சுமார் 17 ஏக்கரா நிலங்கள், சில கம்பெனிகளில் உள்ள ஷேர்கள்) அர்ப்பணம் செய்துவிட்டார்கள். அவர்களுடைய தர்மபத்தினி ஸ்ரீ பர்வதம்மாள் அவர்களும் தன்னுடைய பர்த்தாவுக்கு அனுகூலமாகவே யிருந்து தன்னிடம் இருந்த சொத்துக்களையும் 31-1-38ல் உயில் மூலமும் 31—12—41ல் codicil மூலமும் மேற்படி தர்மங்களுக்கும் இன்னும் சில தர்மங்களுக்கும் அர்ப்பணம் செய்துவிட்டார்கள். மேற்படி தர்மங்கள் அவருடைய ஜீவிய

தசையில் அவராலேயே ஆரம்பிக்கப்பட்டு வேதாந்த பாடசாலையில் இதர வித்யார்த்திகளுடன் தானும் ஒரு வித்யார்த்தியாகவே இருந்து சுமார் 8 வருஷ காலம் வரை நடத்திவந்து 1940-ம் வருஷத்தில் தேஹவியோகம் அடைந்தார்கள்.

அதற்குப்பிறகு மேற்படி தர்மங்களை உயில்படி நியமிக்கப்பட்ட டிரஸ்டிகள் நடத்தி வருகிறார்கள். வேதாந்த வகுப்புக்குத் தனக்கு பந்துவும் வேதாந்த சாஸ்திரத்தில் பிரசித்த பண்டிதருமான பிரம்ஹஸ்ரீ S. V. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளையும், வேத பாடசாலைக்கு முதலில் ப்ரம்ஹஸ்ரீ காசி கனபாடிகளையும் பிறகு ஆங்கரை ப்ரம்ஹஸ்ரீ கிருஷ்ண கனபாடிகளையும் அத்தியாபகராக நியமனஞ்செய்து, மேற்படி பழூர் கிராமத்தில் நடத்தப்பட்டு வந்தன.

ஆயுர்வேத வைத்தியசாலை, சிறுகமணி கிராமத்தில் தக்க யோக்கியதை பொருந்திய வைத்தியர்களைக்கொண்டு நடத்தப்பட்டு வருகிறது.

மேற்படி வேத, வேதாந்த பாடசாலைகள் 1968-ம் வருஷம் வரையில் நன்றாக நடைபெற்று வந்தன. மேற்படி வேத, வேதாந்த பாடசாலைகளில் வித்யாப்யாஸம் செய்து பயனடைந்தவர்கள் தற்சமயம் அநேக இடங்களில் வேத, வேதாந்த அத்யாபகர்களாக இருந்து வருகிறார்கள்.



1968க்குப் பிறகு நில வரும்படி சரிவர வருலாகாமல் குறைந்ததுமட்டுமல்லாமல் **Income-Tax refund** சுமார் ரூ. 2000க்குமேல் வந்து கொண்டிருந்தது ஏற்கனவே நின்றுவிட்டபடியாலும் ஸ்தாபகர் காலத்தில் ஏற்பட்ட கம்பெனி ஷேர்களில் சில கம்பெனிகள் **Defunct** ஆகி **Dividend** கிடைக்காததாலும், வித்யார்த்திகள் வருவது வர வரக் குறைந்து நின்றுவிட்டபடியாலும் மற்றும் சில காரணங்களாலும் பாடசாலைகளாக நடைபெற முடியாமல் போய்விட்டது. ஆனால் வேத வேதாந்த அத்யாபகர்கள் இருந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு சம்பளமும் மற்ற வசதியும் கொடுக்கப்பட்டு வருகிறது.

தற்போது வேதாந்தத்திற்கு இப்பாடசாலையிலேயே வேதாத்யயனம் செய்து வேதாந்தத்தையும் பூர்த்திசெய்த பிரம்மஸ்ரீ யக்ஞேசுவர சாஸ்திரிகளைக் கொண்டு வேதாந்த விஷயங்கள் உபந்யாஸ மூலமாய் தினசரி பழூர் வேதவேதாந்த பாடசாலைக் கட்டடத்திலேயே நடைபெற்று வருகிறது. ப்ரஹ்மஸ்ரீ கிருஷ்ண கனபாடிகள் அவர்களும் பாடசாலையிலேயே தினம் காலையிலும் மாலையிலும் இரண்டு பிரச்னங்கள் சொல்லி வருகிறார்கள்.

சிறுகமணியிலுள்ள ஆயுர்வேத தர்ம ஆஸ்பத்ரி நன்றாக நடைபெற்று வருகிறது. தினசரி சுமார் 50 நோயாளிகளுக்குக் குறையில்லாமல் சிகித்ஸை பெற்று

வருகிறார்கள். அங்கு ஒரு டாக்டர் ஒரு நர்ஸ் ஒரு வேலையாள் வேலைபார்க்கிறார்கள்.

இப்பொழுது டிரஸ்டிகள் இப்படி மாறுபட்ட நிலைமையைக்குறித்து ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் அவர்களை ஹைதராபாத் Camp இல் நேரில் தர்சனம் பண்ணி ஆக்ஞையைக் கேட்டதில் அவர்கள் இட்ட திட்டப்படி தர்மங்கள் நடந்து வருகின்றன. அதன்பிரகாரம் இந்த டிரஸ்டி லிருந்து தர்மஸ்தாபகரின் ஞாபகார்த்த உபந்யா ஸங்கள் நடத்தி உபந்யாஸ விஷயங்கள் புத்தக வடிவில் அச்சிட்டு வெளியிடப்படுகிறது.

A. V. சுப்ரமண்யய்யர்.
L. S. பார்த்தசாரதி அய்யர்.
S. R. வெங்கடேச அய்யர்.
டிரஸ்டிகள்.

பழூர்.



பண்டிதராஜ, சாஸ்திர ரத்னகர

**ப்ரஹ்மஸ்ரீ V. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள்**

ஸ்ரீகுருப்யோ நம:

# ப்ரஸ்தாவனா

பழுவூர் வேதவேதாந்த பாடசாலை ஸ்தாபனத்தின் டிரஸ்டிகளான ப்ரும்ஹஸ்ரீ L. S. பார்த்தசாரதி அய்யரவர்களும் ப்ரும்ஹஸ்ரீ A. V. ஸுப்ரஹ்மண்ய அய்யரவர்களும் தர்மஸ்தாபகரான ஸ்ரீராமசந்திர அய்யரின் ஞாபகார்த்தமாக ஆசார்யாளின் ஸூத்ர பாஷ்ய விஷயமாய் கோடை ஸமயத்தில் ஐந்து உபந்யாஸங்கள் செய்யவேண்டும் என்று என்னிடம் சொன்னார்கள். தர்மஸ்தாபகர் பெரியோர்களிடம் வேதாந்த சாஸ்திரத்தை கேட்டு நன்றாய் அறிந்து கொண்டவர். எனக்கு அவருடன் நல்ல பரிசயம் கிடைத்திருந்தது. ஆசார்யபாஷ்யத்தை பரிசீலனம் செய்து அனுஸந்தானம் செய்யும் கார்யமானதாலும் ஒரு தார்மிகரின் ஞாபகார்த்தமான காரியமானதாலும் மிகவும் ஸந்தோஷத்துடன் நான் ப்ரஸங்கம் செய்வதாக ஒத்துக்கொண்டேன். அதன்படி நடந்த மே மாதத்தில் திருச்சி அத்வைத சபா கட்டடத்தில் உபந்யாஸங்கள் நடந்தன. அவைகளின் விஷயத்தைத் தொகுத்து எழுதியது இந்த 'சாரீரக பாஷ்யஸாரம்' என்ற சிறிய புத்தகம்.

1968-ம் வருஷத்தில் அத்வைத சபையாரால் 'சாரீரக மீமாம்ஸாபாஷ்ய ஸங்கிரஹம்' என்ற சிறிய

புத்தகம் வெளியிடப்பட்டது. அதுவும் ஸூத்ர பாஷ்ய விஷயமாக நான் செய்த உபந்யாஸங்களின் விஷயத்தைத் தொகுத்து எழுதப்பட்டது. ஆகையால் அந்த புத்தகத்தில் சொல்லாத விஷயங்களையே பெரும்பாலாக ப்ரவசனம் செய்தேன்.

**'रत्नेषु लुप्तेषु बहुष्वमर्त्यैः अद्यापि रत्नाकर एव सिन्धुः'**

'இஷ்டப்படி பலரால் ரத்னங்கள் ஸமுத்ரத்திலிருந்து எடுக்கப்பட்டாலும் இன்றைக்கும் பல ரத்னங்களுக்கு இருப்பிடமாகவே ஸமுத்ரமிருக்கிறது' என்று ஒரு கவி கூறியிருக்கிறார். அதுபோல வேதாந்தார்த்த ரத்னங்களை ஆசார்ய பாஷ்யத்திலிருந்து எவ்வளவு தடவைகள் நாமெடுத்தாலும் வேதாந்தார்த்த ரத்னாகரமாகவே பாஷ்யமிருப்பதால் ப்ரவசனத்தில் க்லேசமெதுவுமில்லாமலிருந்தது. பகவத்பாதாளால் நிர்ணயம் செய்யப்பட்ட ஸித்தாந்தத்தை அனுஸரித்து அதற்கு போஷகமாகவே, ஸ்ரீப்ருஹ்மாநந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள், ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரவர்கள் முதலிய பெரியோர்கள் ஸூத்ரத்திற்கு செய்த வ்யாக்யானங்களும் இதில் நிரூபணம் செய்யப்பட்டிருக்கின்றன. ஆசார்ய பாஷ்ய ரஸிகர்களுக்கு மனனம் செய்வதற்கு உதவியாக இந்த சிறிய புத்தகமிருக்க வேண்டுமென்பது என்னுடைய தீவ்ரமான ஆசை. அதை ஸர்வேச்வரன் பூர்த்திசெய்து கொடுக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறேன்.



திருச்சி நகரவாஸிகளும் பக்கத்து கிராமவாஸிகளுமான ரஸிகர்களும் பண்டிதர்களும் மழைபெய்த நாட்களிலும் மிகவும் உத்ஸாஹத்துடன் வந்து ப்ரவசனங்களை ச்ரவணம் செய்து பெருமைப்படுத்தினார்கள். என் சரீர ச்ரமத்தையறிந்து எனக்கு பல வசதிகள் செய்துகொடுத்ததோடு உத்ஸாஹத்துடன் ப்ரவசனங்களை நடத்திக் கொடுத்த ஸ்ரீமான் A. வெங்கடேச்வரன் (அத்வைத ஸபா செக்ரடரி) அவர்களுக்கு ஆத்மாநுபவம் வரும்படி பகவானை ப்ரார்த்திக்கிறேன். மிகவும் அன்புடன் என்னை ப்ரவசனங்கள் செய்யும்படி சொல்லி இந்த புத்தகத்தையும் வெளியிட்டு கௌரவித்த, தர்மஸ்தாபன ட்ரஸ்டிகளான ஸ்ரீமான் L. S. பார்த்தஸாரதி அய்யர் (Retd. Dt. Judge) அவர்களுக்கும் ஸ்ரீமான் A. V. ஸுப்ரமண்ய அய்யர் (அட்வகேட்) அவர்களுக்கும் என்னுடைய ஹ்ருதயபூர்வமான கிருதக்ஞதையை தெரிவித்துக் கொள்ளுகிறேன். நம்முடைய எல்லாவிதமான ச்ரேயஸ்ஸுகளுக்கும் காரணமாக பரமானுக்ரஹம் செய்துகொண்டிருக்கும் நமது பரமாசார்யாளின் பாதகமலங்களில் அனேக ஸாஷ்டாங்க நமஸ்காரங்களை செய்து என் விக்ஞாபனத்தை முடித்துக் கொள்ளுகிறேன்.

**वर्धतां वैदिको धर्मः**

மைலாப்பூர்
17—12—71

V. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி

# முகவுரை

திருச்சி ஜில்லா பழுவூர் கிராமத்தில் வேத வேதாந்த பாடசாலைகளை ஸ்தாபித்த மஹாபுருஷர் ஸ்ரீ P. ராமச்சந்திரய்யரின் ஞாபகார்த்தமாகப் பாடசாலை ட்ரஸ்டின் ஆதரவில் திருச்சியில் பண்டிதராஜ ப்ரஹ்மஸ்ரீ V. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளால் நடத்தப்பட்ட உபந்யாஸங்களை, ட்ரஸ்டிகளின் பிரார்த்தனைக்கு இணங்கி அவர்களே ஸங்கிரஹித்துக் கொடுத்ததை, ''சாரீரக பாஷ்யஸாரம்'' என்ற பெயரில் அச்சிட்ட இப்புஸ்தகம் இவ்வருஷத்திய திருச்சி அத்வைத ஸபா வார்ஷிக மஹோத்ஸவத்தில் அத்வைத பண்டிதர்களின் ஸதஸ்ஸில் பிரகாசம் அடைகிறது என்பதில், ட்ரஸ்டிகளாகிய நாங்கள் மிகவும் பெருமைப்படுகிறோம்.

இப்புஸ்தகத்தை நான் முழுவதும் வாசித்து என் சிற்றறிவுக்கு எட்டியபடி நான் அறிந்து கொண்டமட்டில் இந்நூலில் விளக்கப்பட்ட பல தத்வங்களில் சிலவற்றையாவது எடுத்துக்கூறி என் அறிவை விருத்தி செய்துகொள்ள வேண்டும் என்பதுதான் முகவுரை எழுதுவதின் முக்கிய நோக்கமாகும்.

நான்கு அத்யாயங்கள் கொண்ட ப்ரம்ஹஸூத்ரங்களுக்கு ஸூத்ர க்ரமப்படியே அமைந்துள்ள

பகவத்பாத பாஷ்யம் ப்ரஸந்நமான சைலியி
இருந்தாலும் ரத்னுகரம்போல் கம்பீர்மாவு
விஸ்தாரமாகவும் இருப்பதால் மஹாபண்டிதர்க
தான் அதிலிருந்து அத்வைத தத்வங்களை ஸுல
மாகப் புரிந்துகொள்ள முடியும். ப்ரஹ்மஸ்ரீ சாஸ்தி
கள், அதிகமாக சாஸ்திர பரிசயமில்லாத எங்களை
போன்ருேரும் ஸுலபமாகப் புரிந்து மனதில் தரி
கும்படியான ரீதியில் ஸூத்ராத்யாய க்ரமத்தை
விட்டு, பாஷ்யத்தில் விளக்கப்பட்டுள்ள கருத்து
களையே கோர்வைப்படுத்தி ஐந்து தலைப்புகளி
விசதமாகக் கூறியிருக்கிருர். அவையாவன :-
மோக்ஷ மார்க்கம், பிரபஞ்சதத்வம், ஜீவஸ்வரூபம்
ப்ரஹ்மஸ்வரூபம், ஜீவப்ரம்ஹ ஸம்பந்தமு
மோக்ஷமும்.

முதலில் அவதரணிகையில் ‘वेदान्तवाक्यकुसु
ग्रथनार्थत्वात् सूत्राणां’ என்ற பாஷ்யபங்க்தியை
‘तत्त्वं तु बादरायणात्’ என்ற அபியுக்த வசனத்தை
காட்டி சாரீரக மீமாம்ஸையின் சிறப்பும், அத
பொருள் (வேதாந்தங்களால் விசாரம் செய்
சாரீரகனை (ஜீவனை) சோதித்து ப்ரம்ஹம
நிரூபணம் செய்யும் சாஸ்திரம்), நான்கு அத்யாய
களின் விஷயம், ஸமந்வய ஸூத்ரத்தின் கருத்
இவைகளும் கூறப்பட்டுள்ளன.

1. **மோக்ஷமார்க்கம்:—** மோக்ஷம் நித்யஸித்தமா
புருஷார்த்தம். அது புதிதாக உண்டாக்கப்படுவ



இல்லை. அவித்யையால் ஆத்மஸ்வரூபம் மறைந்
திருக்கிறது. அந்த மறைவு விலகினுல் நித்ய
ஸித்தமான மோக்ஷம் ஸ்வயமாகவே பிரகாசிக்கும்.
அவித்யாதிரோதானத்தால்தான் பந்தமோக்ஷங்கள்.
‘... ... **तिरोहितं ततो ह्यस्य बन्धविपर्ययौ**’ (ब्र. सू. ३-२-५)

ஆத்மஞானம் கர்மாவிற்கு அங்கம் (क्रत्वर्थ)
அன்று, கர்ம நிரபேக்ஷமாக ஸ்வதந்த்ரமாக
புருஷார்த்த ஹேது என்று நிரூபணம் செய்து,
ஜைமினி மதத்தை நிராகரணம் செய்து, ஆத்மா
கர்த்ருத்வாதி தர்மங்களில்லாத அஸங்க உதாஸீன
ஸ்வரூபம் என்றும், ஆத்மஞானம் என்பது ஆத்ம
ஸாக்ஷாத்காரம் — ‘**अहं ब्रह्मास्मि**’ என்ற **அனுபவம்**,
இந்த ப்ரஹ்மாத்மைக்ய ஞானம்தான் மோக்ஷ
ஹேது என்று விளக்கப்பட்டிருக்கிறது.

ஆத்மஞான ஸாதனங்களுள் வைராக்யத்தையும்
பக்தியையும் விஸ்தாரமாகச் சொல்லியுள்ளார்கள்.
‘வைராக்யம் உள்ளவன்தானே சாரீரக
மீமாம்ஸா சாஸ்திரத்தில் அதிகாரி. அவனுக்கு
மறுபடியும் வைராக்யத்தை உபதேசிக்க அவசியம்
இல்லையே. வைராக்யபாதம் (அத். 3, பா. 1)
எதற்காக ?’ என்ற கேள்விக்கு நியாய மீமாம்ஸா
திருஷ்டாந்தங்களுடன் ‘வைராக்யத்தை உறுதிப்
படுத்துவதற்காக’ என்ற ஸமாதானத்தைக் காட்டி
வைராக்யபாதத்திலுள்ள ஒவ்வொரு அதிகரணத்
தின் விஷயங்களையும் கூறி பஞ்சாக்னி வித்யையை

முழுவதும் நிரூபணம் செய்துள்ளார்கள். இதிலி
ருந்தும் ஆசார்யாளுடைய ப்ரகரண சுலோகங்களி
லிருந்தும் ஸம்ஸார கதியிலுள்ள துன்பங்களைக்
காட்டி வைராக்யஸாதனமான தோஷதர்சனத்தை
நன்கு நிரூபித்துள்ளார்கள். ஸர்வ வேதாந்த
ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹத்திலிருந்து சில
சுலோகங்களைக்காட்டி கர்ப்பவாஸம் முதல் மரண
பர்யந்தம் ஜீவதசையில் துக்கங்கள் எப்படித்
தொடர்ந்து இருக்கின்றன என்பதை விவரித்து
तस्मात् जुगुप्सेत என்ற உபதேசத்தின்கருத்தை நன்கு
விளக்கியுள்ளார்கள். கர்மா' முதலான ஒவ்
வொரு ஸாதனமும் ஸபலமாகவேண்டுமானால்
பக்தி மூலம் ஈசுவர ப்ரஸாதம் அவசியம் என்பதற்கு
மூன்று ஸூத்ரங்களைக் காட்டி, இதற்கு ப்ரமாண
மாக கீதை, மூகபஞ்சசதி, ஸர்வவேதாந்த
ஸித்தாந்த ஸாரஸங்கிரஹம் இவற்றில் உள்ள
சுலோகங்களை காட்டியிருப்பதிலிருந்து ஞானத்தை
விரும்புபவனுக்கு பக்தியில் உதாஸீன புத்தி
கூடாது. அது அந்தரங்க ஸாதனம் என்பதைத்
தெளிவாக நம் மனதில் பதியவைத்திருக்கிறார்கள்.

2. பிரபஞ்சதத்வம் :-பிரபஞ்சம் மித்யையானதால்
அத்வைத ப்ரஹ்மம் ஸித்திப்பதில் விரோதமில்லை.
மித்யை என்றால் அஸத் அன்று. ஸதஸத் விலக்ஷ
ணம். பிரத்யக்ஷ ப்ரமாணத்தால் பிரபஞ்சம் ஸத்ய
மாகத் தோன்றியபோதிலும் அதைவிட பிரபலமான
நிர்துஷ்ட சுருதி ப்ரமாணத்தாலும், அர்த்தாபத்தி



முதலான பிரமாணங்களாலும் பிரபஞ்சம் மித்யை
என்று ஸித்திக்கிறது. காரணம் தான் ஸத்யம்,
விகாரம் பெயரளவுதான் 'मृत्तिकेत्येव सत्यम्' என்று
சாந்தோக்ய ச்ருதி கூறுகிறது. இந்த சுருதியில் इति
பதத்திற்கு 'आदि' என்று பொருள். எல்லாவற்றிற்கும்
பரமகாரணமான ப்ரஹ்மமே ஸத்யம். விகாரமெல்
லாம் மித்யை என்பது இந்த சுருதியின் உட்கருத்து.
உபநிஷத்தில் பல இடங்களில் பிரஹ்மத்தில்
பிரபஞ்சத்தை நிஷேதித்திருக்கிறது. த்வைதத்தை
கூறுமிடத்தில் 'द्वैतमिव भवति' என்று इवகாரம்
காணப்படுகிறது. ப்ரஹ்மம் விவர்த்த காரணம்.
அது உலகமாகத் தோன்றினாலும் சுக்தியிலும்,
ரஜ்ஜுவிலும்போல் ப்ரஹ்மஸ்வரூபத்தில் ச்யுதி
கிடையாது. இது முதலான பல கருத்துக்கள்
பாஷ்யத்திலிருந்து காட்டப்பட்டுள்ளன.

भावे चोपलब्धेः என்ற ஸூத்ரத்தில் பாடபேதத்தால்
பிரத்யக்ஷம் அனுமானம் இரு ப்ரமாணங்களாலும்
பிரபஞ்சம் மித்யை என்று ஸித்திக்கிறது. பிரபஞ்சம்
மித்யையானால் அதில் அடங்கிய வேதமும் மித்யை
யாகுமே! பொய்யான உபநிஷத்தினால் ஸத்யமான
ப்ரஹ்மம் எப்படி ஸித்திக்கும்? என்ற கேள்விக்கு
கோடுகளாக ஆரோபிக்கப்பட்ட வர்ணங்கள்
உண்மையான அர்த்த ஞானத்தை உண்டுபண்ணு
வதுபோல் மித்யையான உபநிஷத்திலிருந்து
உண்மையான ப்ரஹ்ம ஞானம் ஏற்படலாமென்றும்,
ரஜ்ஜு ஸர்ப்பம் பொய்யானாலும் அதிலிருந்து

உண்மையான பயம் ஏற்படுவதுபோல் பொய்யான பிரபஞ்சத்திலிருந்து நாம் பலவித பயன்களைப் பெறலாம் என்றும், பலவிதமாக பிரபஞ்ச மித்யாத்வத்தை நிரூபணம் செய்திருப்பது நமக்கு சுலபமாகப் புரிந்துகொள்ள முடிகிறது.

3. **ஜீவஸ்வரூபம்** :— இதில் லோகாயத மதத்தை நிராகரணம் செய்து தேஹாதிகளைக் காட்டிலும் வேருக ஜீவனைக் காட்டி, அவன் ஞானுச்ரயனல்ல ஸ்வயம்ப்ரகாச ஞானஸ்வரூபன், அந்தக்கரணத்தில் உண்டாகும் வ்ருத்தி ஞானத்தையும் பிரகாசப்படுத்தும் ஸாக்ஷிஸ்வரூபி என்பதையும், ஜீவன்விபு, உபநிஷத்துக்களில் வரும் 'அணு' என்ற பதத்திற்கு ஸூக்ஷ்மம் என்று அர்த்தம். அந்தக்கரண உபாதியைக்கொண்டுதான் ஜீவனுக்கு பரிமாணம், உத்க்ராந்தி கமனுதிகள், ஸுகதுக்காதிகள் கூறப்பட்டுள்ளன. இவை ஜீவனுக்கு ஸ்வத: கிடையாது. தத்வஸாக்ஷாத்காரம் வரும்வரை அந்தக்கரண உபாதி அத்யாஸத்தால் ஆத்மாவுடன் ஸம்பந்தப்பட்டிருக்கும். இதுமுதலான பல விஷயங்கள் **तद्गुणसारत्वात्** முதலான பல ஸூத்ரங்களையும் பாஷ்யத்தையும் காட்டி விவரித்து விளக்கப்பட்டு உள்ளன.

ஜீவஸ்வரூப விசாரத்தில் அவச்சேதவாதம், ப்ரதிபிம்பவாதம் இவ்விரண்டிற்கும் யுக்திகளைக் கூறி பின்வருமாறு ஸமரஸப்படுத்தியிருப்பது நமக்கு ஸந்தேஹங்களை நீக்கித் தெளிவைத் தருகிறது.



'உபநிஷத்பாஷ்யத்தில் பிரதிபிம்பவாதத்தில் தோஷம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அவச்சேத வாதத்தில் தோஷம் கூறப்படவில்லை. ஆனுல் ஸூத்ர பாஷ்யத்தில் இரண்டு பக்ஷங்களையும் அநுஸரித்துப் பல இடங்களில் நிரூபணம் இருக்கிறது. இரண்டும் அத்வைத ஸித்தாந்தத்திற்கு அநுகூலமானவையே'.

4. **ப்ரஹ்மஸ்வரூபம்** :— ப்ரஹ்மம் ஸகுணமா, நிர்குணமா என்ற விசாரத்தில் ஸகுணமாயும் நிர்குணமாயும் ச்ருதிகள் ப்ரஹ்மத்தைக் கூறியுள்ள போதிலும் ப்ரஹ்மத்தை ப்ரதிபாதனம் செய்யுமிடங்களிலெல்லாம் நிர்விசேஷமாகவே கூறுகின்றன. ஸகுண வாக்யங்கள் உபாஸனையை மட்டும் விதிக்கின்றன. அவைகளுக்கு ப்ரஹ்மத்தில் குணங்கள் இருப்பதில் தாத்பர்யமில்லை. நிர்குண வாக்யங்கள் தாத்பர்யத்துடன் கூறுகின்றன.

நிர்குணம் என்பதற்கு ஹேயமான குணங்கள் அதில் இல்லை என்றே, ப்ராக்ருதமான குணங்கள் இல்லை என்றே தாத்பர்யம் கூறுவது ஸரியல்ல, என்பது பல காரணங்களால் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ப்ரஹ்மத்தினிடமிருந்து லோக சிருஷ்டியைக் கூறுவது நிர்குணம் என்று போதிப்பதற்காகத்தான்.

ஸகுண ப்ரஹ்மோபாஸனம் சித்தைகாக்ர்யத்தை ஸுலபமாக ஸம்பாதித்துக் கொடுப்பது மூலமாக ஞானத்திற்கு ஸாதனமாகிறது. தியானம்

ஸித்தித்தவுடன் உபாஸிக்கப்பட்ட ஸகுண ப்ரஹ்மமே உபாதி கல்பனையற்ற நிர்குண ப்ரஹ்மமாக ஸாக்ஷாத்கார விஷயம் ஆகிவிடும், என்று கல்பதரு வாக்யத்தைக் காட்டிக் கூறியிருக்கிருர்கள்.

வாஸ்தவத்தில் ப்ரஹ்மம் அத்விதீயானந்த ஸ்வரூபம், ஸ்வயம்பிரகாசம், ஸர்வகதம் (எவ்வித பரிச்சேதமுமற்றது). அதுவே மாயையால் உலகமாகத் தோன்றுகிறது. ஒரே சந்திரன் இரண்டாகத் தோன்றுவதுபோல ஈச்வரனுகவும் ஜீவனுகவும் தோன்றுகிறது. இது முதலான பல துரூஹமான தத்வங்கள் ஸூத்ர பாஷ்ய, ப்ரமாணங்களுடன் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

5. ஜீவப்ரஹ்ம ஸம்பந்தம் இதில் பல ஸூத்ரங்களை எடுத்துக்கொண்டு (1) பேதமும் அபேதமும் (2) அத்யந்த பேதம் (3) அபேதம் என்ற மூன்று மதங்களையும் சில உட்பிரிவுகளையும் விளக்கி அபேத மதத்தை ஸித்தாந்தப்படுத்தியுள்ளார்கள். அவைகளாவன :—

1. பேதமும் அபேதமும் :

I ப்ரக்ருதி-விக்ருதி: (அக்னியும் அதன் பொறிகளும்போல்) விஸ்புலிங்க திருஷ்டாந்த ச்ருதி (अवच्छेदकभेदात्).

II. பந்தமும் மோக்ஷமும்: (பந்தத்தில் பேதம், மோக்ஷத்தில் அபேதம்) நதியும் ஸமுத்ரமும் போல நதீ ஸமுத்ர திருஷ்டாந்த ச்ருதி (कार्यभेदेन).



III. அஹி-குண்டல ஆபோகங்கள் (பாம்பு ஒன்று, அதன் குண்டல-ஆபோக விஷயங்கள் வெவ்வேறு) (विषयभेदेन).

IV. ஸூர்யன்-அதன் பிரகாசம்: (பரஸ்பரம் பேதம், சேர்ந்தே தோன்றுவதால் அபேதம்) (धर्मधर्मिभावेन).

2. அத்யந்தபேதம் :

(குடமும் வஸ்திரமும் போல).

3. அத்யந்த அபேதம் :

(கடாகாசமும் மஹாகாசமும், ஸூரியனும் அதன் பிரதிபிம்பமும்போல) ஜீவன் ப்ரஹ்மத்தின் விகாரமல்ல. ஒருகாலத்திலும் வேருனவனுமல்ல. ப்ரஹ்மமே ஜீவன். அவித்யையால் கல்பித பேதம் உள்ளவன். அநுப்ரவேசாதி ச்ருதிகள் (उपाधिकल्पितभेदेन).

இம்மதங்களை ஹேது திருஷ்டாந்தங்களுடன் விளக்கிக்கூறிவிட்டு, முதல் ஐந்து மதங்களில் முக்கியமாகக் கூறப்பட்ட தோஷங்கள் முறையே சுருக்கிக் காட்டப்படுகின்றன.

1. I ப்ரகிருதி லயம்தான் புருஷார்த்தமாகும், மோக்ஷம் புருஷார்த்தமாகாது.

II யுக்தி விரோதம். குடமும் வஸ்திரமும் இரண்டும் ஒன்ருகாது.

III குண்டலம் ஆபோகமென்னும் ஆகார
பேதமே தவிற வஸ்துவில் பேதமில்லை. ஆதலால்
விஷயபேதமில்லை.

IV சேர்ந்தே தோன்றுவதால் அபேதம்
என்றால் தேஹாத்ம பாவமும் பரமார்த்தமாகிவிடும்.

2. பல அபேத சுருதிகள், பேத நிந்தாச்ருதிகளின்
விரோதம் வருவதால் அத்யந்த பேதமில்லை.

மேலும் பல தோஷங்களால் முன் மதங்களை
நிராகரணம் செய்து மூன்றுவதான அத்யந்த
அபேத மதத்தை ஸித்தாந்தப்படுத்தி இதற்கு
பிரமாணமாக பல உபநிஷத் வாக்யங்களையும்
விஷ்ணு புராண வாக்யங்களையும் காட்டியிருக்கிறார்.
இவ்வாறு ஸாமான்யர்களான நமக்கே நன்கு
புரியும்படி சாரீரகனை ப்ரஹ்மமாக காட்டியிருப்பது
ஸ்ரீசாஸ்திரிகளின் பாண்டித்யத்தையும் போதன
சக்தியையும் நன்கு புலப்படுத்துகிறது.

முக்தி:— ப்ரதிபந்தகமான கர்மங்கள்
இல்லாதவரை ச்ரவணாதி ஸாதனங்களை அநுஷ்
டிக்கும் ஜன்மத்திலேயே ஆத்ம ஸாக்ஷாத்காரம்
வந்துவிடும். வெளிச்சம் வந்தால் உடனே இருள்
விலகிவிடுவதுபோல ஆத்ம ஸாக்ஷாத்காரம் வந்த
உடனேயே அவித்யா ஆவரணம் நீங்கி ஆத்மா
ஸ்வயம்ப்ரகாசமானதால் பரிபூர்ண ஆனந்தம்
ப்ரகாசிக்கும். ப்ராரப்தகர்ம ப்ரதிபந்தமிருந்தால்
அதன் பலனை அனுபவித்த பிறகு மறு ஜன்மத்தில்



ஸாக்ஷாத்காரம் வரும். ஆனால் ஸாக்ஷாத்காரம்
வந்துவிட்டால் முக்தி வருவதற்கு ப்ராரப்தகர்மா
தடங்கலாக இருக்காது. ''ப்ராரப்தகர்மப்ரதிபந்தம்
இல்லாமற்போனல்'' என்ற நியமம் ஸாக்ஷாத்காரம்
ஏற்படுகிற விஷயத்தில்தானே தவிற அதன் பல
னான முக்தி ஏற்படும் விஷயத்தில் இந்த நியமம்
கிடையாது. ஏனெனில் ஞானம் வந்தவுடனேயே
முக்தி ஏற்படுவதாகப் பல உபநிஷத்துக்கள்
கூறுகின்றன. ப்ராரப்த கர்ம பலனை
அனுபவித்துக் கொண்டே முக்தியை-பரிபூர்ணா
னந்தத்தை அனுபவிக்கலாம். இவ்விதம்
ப்ரஹ்மவித்துக்களின் அனுபவமும் இருக்கிறது.
அவித்யா நிவ்ருத்தி என்பது வேறு அன்று,
பரமானந்த ஆத்மஸ்வரூபமே. இவ்விஷயங்களை,

'ऐहिकमपि अप्रस्तुतप्रतिबन्धे तद्दर्शनात्' 'एवं मुक्तिफलानियमस्तदवस्थावधृतेस्तदवस्थावधृतेः ।'

என்ற ஸூத்ரங்களையும், இரண்டாவது ஸூத்ரத்
திற்கு ப்ரம்ஹானந்த ஸரஸ்வதீ எழுதிய விசேஷ
உரையையும் காட்டி நன்கு தெளியவைத்திருக்
கிறார்கள். இந்நூலில் பல இடங்களில் ப்ரம்ஹா
னந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகளின் வேதாந்த ஸூத்ர
முக்தாவளியிலிருந்து வசனங்களை உதாஹரித்து
அதில் கூறியுள்ள ஸூத்ரங்களின் விசேஷாபி
ப்ராயங்களைக் காட்டி இதன் மூலம் துரூஹமான
அத்வைத தத்வங்களை யுக்திகளுடன் தெளிவாக்கி
யிருப்பது குறிப்பிடத்தக்கது.

பிராரப்த கர்மபலானுபவம் முடிந்ததும் சரீரம் விழுந்த பிறகு விதேஹ கைவல்யம் அடைகிறான். பிராணன்கள் லயத்தையடைகின்றன. உத்க்ராந்தியோ கமனமோ கிடையாது. இங்கு 'गतेरर्थवत्वात्' என்ற ஸூத்ரத்தில் 'अर्थ' என்ற பதத்திற்கு நிவிருத்தி என்ற பொருளை பிரமாணங்களுடன் காட்டியிருப்பது கவனிக்கத்தக்கது.

முக்தியில் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேருக இருப்பதில்லை. ப்ரம்ஹமாகவேதான் இருக்கிறான். இந்நிலையே 'अशरीरत्वं, अमृतत्वं' என்ற சொற்களால் கூறப்படுகிறது.

இவ்வாறு அத்வைதிகள் யாவரும் முக்யமாக அறியவேண்டிய ஐந்து விஷயங்களை எடுத்துக் கொண்டு இவைபற்றி சாரீரக பாஷ்ய விசாரம் செய்து அந்தந்த விஷயத்தை விவரித்துள்ள ச்ருதி வாக்யங்கள், ஸூத்ரங்கள், பாஷ்ய பங்க்திகள், அத்வைத ஸித்தி, வேதாந்தஸூத்ர முக்தாவளி, பாமதி, கல்பதரு, ந்யாய ரக்ஷாமணி, வாஸிஷ்டம், மற்றும் ஆசார்ய ப்ரகரணங்கள் ஸ்ம்ருதி, புராணம், பாரதம், மூகபஞ்சசதி முதலிய நூல்களிலிருந்து வசனங்களை எடுத்துத் தக்க யுக்திகளுடன் சேர்த்து அமைத்த இந்த நூல் பலவகையான ஸுகந்தி புஷ்பங்களைக்கொண்டு தொடுத்த ஒரு வனமாலையாக அமைந்துள்ளது: அத்வைத தத்வங்களை அறிய விரும்பும் வித்யார்த்தி



கள் யாவரும் ஸுலபமாகக் கிடைத்துள்ள இம்மலர் மாலையைக் கண்டகத (कण्ठगत) மாகச்செய்து இதன் பரிமளத்தை ஸதா ஆக்ராணம் செய்துகொண்டு இருந்தால் அத்வைத வாஸனுநுபவம் கிடைக்கும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை.

ஸாமான்ய அதிகாரிகளும் நன்கு புரியும்படி துருஹமான சாரீரக மீமாம்ஸா பாஷ்ய ஸாரங்களை ரமணீயமாயும் பிரஸன்னமாயுமுள்ள நடையில் எடுத்துக்கொடுத்து பரம உபகாரம் செய்துள்ள ப்ரஹ்மஸ்ரீ சாஸ்திரிகளுக்கு, இந்த டிரஸ்டிகள் க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்வதுடன், இந்த டிரஸ்டை ஸ்தாபித்த ப்ரஹ்மஸ்ரீ ராமசந்திர அய்யர் அவர்களின் ஆத்மா இந்த ஸத்கார்யத்தால் ஸந்துஷ்டியடையும் என்ற ஸந்தோஷத்துடன், ப்ரஹ்மஸ்ரீ சாஸ்திரிகள் அவர்கள் த்ருடகாத்ரத்துடன் தீர்க்ககாலம் சாஸ்த்ரார்த்தோபதேசம் செய்துகொண்டு பிரகாசிக்கவேணுமாய் ஸர்வேசுவரனை பிரார்த்திக்கிறோம்.

ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீ விலாஸ் பிரஸ்ஸில் எவ்வளவோ அவசர வேலைகள் இருந்தும் இதற்கு முதலிடம் கொடுத்து மிகுந்த ஊக்கத்துடன் குறிப்பிட்ட காலத்திற்குள் மிக அழகாக இந்நூலை அச்சிட்டுத் தந்த மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ கோதண்டராம அய்யர் அவர்களுக்கும், பழுவூர் வேதாந்த பாடசாலையின் ஆரம்பத்திலேயே அதில்

சேர்ந்து வேதாந்த சாஸ்திரங்களை முழுவதும் அப்
ஸித்த ஸ்ரீவாணீ விலாஸ் பிரஸ் பண்டிட் ப்ரஹ்ம
K. S. வெங்கடராம சாஸ்திரிகள் மிகுந்த 'சிரத்
யுடன் நன்கு சோதித்து ப்ரூப் திருத்திக்கொடுத்
உதவி செய்தமைக்காக அன்னாருக்கும், அச்சி
வதற்கு சௌகர்யமாக பிரஸ் காபி தயார் செய்
கொடுத்த திருச்சி அத்வைத ஸபா பண்டி
ப்ரம்ஹஸ்ரீ S. ஸுப்ரமண்ய சாஸ்திரிகள் அவர்களு
க்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோ

ஞாபகார்த்த உபந்யாஸங்கள் நடத்த இட
கொடுத்தும், இந்த அத்வைத ஸபா வார்ஷி
வித்வத் ஸதஸ்ஸில் இந்நூலை வெளியிட அவகாச
அளித்தும் மற்றும் பலவிதத்தில் உபகாரம் செய்
அத்வைத ஸபா காரியதர்சிகள் ஸ்ரீ A. வெங்கடே
அய்யர், ஸ்ரீ P. ஜம்புநாதய்யர் இவர்களுக்கு
எங்கள் நன்றி உரித்தாகுக.

திருச்சி,
28—12—71.

*L. S. பார்த்தஸாரதி அய்யர்*
*(Rtd. Dt Judge.)*

॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ विषयानुक्रमणिका ॥

### பொருளடக்கம்

—※—

शारीरकस्य सारार्थसंग्रहं कर्तुमुद्यतः ।
शाहजीपूरभिजनः सुब्रह्मण्याभिधो बुधः ॥ ६ ॥

### அவதரணிகை

ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலையென்னும் மோக்ஷத்தை அடைவதற்குத் தெரிந்துகொள்ள வேண்டிய தத்வங்களை நிரூபணம்செய்யும் ந்யாயம் வைசேஷிகம் முதலிய பல சாஸ்திரங்களை மஹரிஷிகள் செய்திருக்கிறார்கள். அவைகளுள் பாதராயண மஹரிஷியால் செய்யப்பட்ட 'சாரீரகமீமாம்ஸா' என்ற வேதாந்த சாஸ்திரம் மேலானது. அதில் ஒவ்வொரு தத்துவமும் வேதாந்த வாக்யத்தின் அர்த்த விசாரம் செய்து விளக்கப்படுகிறது. வேதாந்த வாக்யங்களாகிற புஷ்பங்களை மாலையாக தொடுக்கும் ஸூத்ரமாக வியாஸ ஸூத்ரங்கள் அமைந்திருக்கின்றன என்று பகவத்பாதர்கள் பாஷ்யத்தில் கூறுகிறார்கள்.

"वेदान्तवाक्यकुसुमग्रथनार्थत्वात् सूत्राणाम् । वेदान्तवाक्यानि हि सूत्रैरुदाहृत्य विचार्यन्ते ॥"

என்பது பாஷ்யம். வேதத்தின் உத்தரபாகமான உபநிஷத்துக்களின் (வேதாந்த வாக்யங்களின்) அர்த்தத்தை விசாரணை செய்வதால் 'उत्तरमीमांसा' 'वेदान्तमीमांसा' என்ற பெயராலும், பிரம்ஹத்தை விசாரிப்பதால் 'ब्रह्ममीमांसा' என்ற பெயராலும் அந்த சாஸ்திரம் வழங்கப்படுகிறது. அதற்கு



'शारीरकमीमांसा' என்ற பழமையான பெயருமுண்டு. பகவத்பாதர்கள் முதல் ஸூத்ரத்தின் அவதாரிகையில்,

"यथा चायमर्थः सर्वेषां वेदान्तानां तथा वयमस्यां शारीरकमीमांसायां प्रदर्शयिष्यामः ।"

என்ற வாக்யத்தில் 'शारीरकमीमांसा' என்ற பெயரைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். பிரம்ஹ ஸூத்ரங்களில் சரீரத்தில் நான் என்று அபிமானம் வைக்கும் ஜீவனை 'शारीरः' என்று குறிப்பிடுவதால் ஜீவனை வேதாந்தங்களால் விசாரம்செய்து சோதனை செய்து பிரம்ஹமாக நிரூபணம் செய்யும் சாஸ்திரம் என்று அந்தப்பெயரால் விளங்குகிறது.

[1] 'तत्त्वन्तु बादरायणात्' என்று பெரியோர்கள் கூறுகிறார்கள். வ்யாஸ ஸூத்ரங்களுக்கு ஸ்ரீ சங்கர

---

1. ஸ்ரீஜகதீசபட்டாசாரியாருக்குப் பிற்காலம் வந்த ஸ்ரீ தாமோஹர கோஸ்வாமி பட்டாசார்யர் நவீன ந்யாய பரிஷ்காரத்தையனுஸரித்து ந்யாய ஸூத்ரத்துக்கு ந்யாய ஸூத்ர விவரணம் என்னும் வ்ருத்தியைச்செய்திருக்கிறார். அதில் 4வது அத்யாயத்தின் கடைசியில் 'तत्त्वन्तु बादरायणात्' என்ற ஸூத்ரத்தை எழுதி வேதத்தை அறிந்த பலர் பலவிதமாக தத்துவங்களைச் சொல்லியிருந்தாலும், ப்ரதான ப்ரமாணமான வேதத்தில் சொல்லிய தத்துவங்களையே வ்யாஸர் யுக்திகளால் ஸ்திரப்படுத்தியிருப்பதால் வ்யாஸர் சொல்லிய தத்துவங்களே ஆதரிக்கப்பட வேண்டியவை என்று அந்த ஸூத்ரத்துக்கு வ்யாக்யானம் செய்திருக்கிறார்.

பகவத்பாதாள் தெளிவாயும், கம்பீரமாயுமுள்
பாஷ்யத்தை செய்திருக்கிருர்கள். பரமார்த்
ஸத்யமான வஸ்து பிரம்ஹம் ஒன்றே. அதை
தவிற வேறு ஸத்ய வஸ்து இல்லை. அது நித்
சுத்தமானதும் ஸச்சிதாநந்த வடிவமுமானது
அதுவே உலகத்திற்குக்காரணம். அது வேதாந்த
களால் மட்டும் அறியக்கூடியது. எல்லா வேதாந்த
களும் அத்வைத பிரம்ஹத்தையே தாத்பர்ய
துடன் போதிக்கின்றன. ஸாங்க்ய சாஸ்திரத்தி
கூறிய ப்ரதானமும் நையாயிகர்கள் கூறும் பரம
ணுக்களும் ஜகத்காரணமென்று வேதாந்தங்க

---

"ननु वेदज्ञा अपि नानाविधतत्त्वमाचक्षते । तत्र
समीचीनमित्यत आह – तत्त्वं तु बादरायणादिति । यथार्थद
भगवानेव वेदं प्रणीतवानिति वेदस्यैव प्रधानप्रमाणतया तेन स्वमु
एवोक्तानां तत्त्वानां व्यासेन युक्तिभिः दृढीकृततया तदुक्तानि तत्त्व
न्यादरणीयानि । अस्माभिस्तु वेदविमुखे विवादनिरासाय वेदाभिहि
मन्यथापि व्याख्याय प्रत्यक्षानुमाने पुरस्कृत्य तत्त्वान्यभिहितानी
नात्रादरणमिति सूचितम् ॥" என்பது ந்யாயஸூத்ரவிவரண

ந்யாயபாஷ்யம், வார்த்திகம், தாத்பர்
டீகா, ந்யாயஸூசீநிபந்தம் முதலிய க்ரந்தங்களி
இது ஸூத்ரமாகக் காணப்படவில்லை. ஆயினு
பிரஹ்மாநந்தீயத்தின் வ்யாக்யானமாகிய விட்ட
மிச்ரீயத்தில் 'तदुक्त तत्त्वन्तु बादरायणात्' (N.
अ. सि. पृ 172) என்ற வாக்யம் காணப்படுவதால் இ
பழமையான அபியுக்தவசனம் என்று தெரியவருகிறது.



[illegible]ல்லை. இந்த பரபிரம்ஹத்தை நேரில்
[illegible]க்கவேண்டிய ஸாதநங்கள் இல்லாதவர்
[illegible]த்யானம் செய்வதற்காக மாயாமயமான
[illegible], குணங்கள் இவைகளோடு கூடியதாக
[illegible]த்தை ஸகுணமாக வேதாந்தங்கள் கூறுகின்
[illegible]. அத்வைத பிரம்ஹத்தில் வேதாந்தங்களுக்கு
[illegible]பர்யம் என்று நிரூபணம் செய்யப்படும் முதல்
அத்யாயத்துக்கு 'ஸமன்வயாத்யாயம்' என்று
பெயர். அத்வைத பிரம்ஹம் காரணம் என்பதில்
[illegible]ருதிகளின் விரோதமும், யுக்திகளின் விரோதமு
மில்லை. வேதாந்த வாக்யங்களுக்கும் ஒன்றுக்
கொன்று விரோதமில்லையென்று நிருபணம்
செய்வது இரண்டாவது அத்யாயம். அதற்கு
'அவிரோதாத்யாயம்' என்று பெயர். மோக்ஷத்
துக்கு ஸாதனமான ஞானத்தையும், அதையடைய
வேண்டியதற்கான வைராக்யம், கர்மாக்கள்
முதலியவைகளை நிரூபணம் செய்வது மூன்ருவது
அத்யாயம். அதற்கு 'ஸாதனத்யாயம்' என்று
பெயர். பரப்ரம்ஹஞானி ப்ராரப்த கர்மபலனை
அனுபவித்துக்கொண்டே ஜீவந்முக்தி ஸுகத்தை
யனுபவித்து சரீரம் விழுந்தபின் விதேஹகைவல்யம்
என்ற பரமமுக்தியை அடைகிருன். ஸகுண
ப்ரும்ஹோபாஸகன் சரீரம் விழுந்தபிறகு அர்சிராதி
மார்க்கம் வழியாக கார்ய ப்ரும்ஹலோகம் சென்று
போகத்தையனுபவிக்கிருன். அது அபரமுக்தி
என்று நிரூபணம் செய்யும் நான்காவது அத்யாயம்
'பலாத்யாயம்' என்று வழங்கப்படும்.

நான்கு அத்யாயங்களின் ஸாரமாக तत्तु समन्वया (ब्र. सू. 1-1-4) என்னும் ஸூத்ரபாஷ்யத்தில் பின்வ மாறு பகவத்பாதர்கள் நிரூபணம் செய்திருக்கிரு கள். (अहं) நான் என்னும் அனுபவத்தில் தோன்று அஹங்காரம் என்ற கர்த்தாவைக் காட்டிலு வேருனதும், கர்த்தாவைப் பிரகாசப்படுத்து ஸாக்ஷியாக இருப்பதும் எல்லாப் பிராணிகளிடமு ஸமமாக உள்ளதும் எல்லோருக்கும் ஆத்மாவுமா ஒரு புருஷன் உபநிஷத்துக்களாலேதான் ப்ரதா மாகச் சொல்லப்படுகிருன். இந்தப் புருஷன் வேத திலேயே முன்பாகமான கர்மகாண்டத்திலே அல்லது எந்தவிதமான தர்க்க சாஸ்திரத்திலே யாராலும் அறியப்படாதவன். அந்த ஆத்மாவை யாரும் நிராகரணம் செய்யவும் முடியாது. விதியின் அங்கமாகச் செய்யவும்முடியாது என்று கம்பீரமா முறையில் வேதாந்த ஸாரத்தைக் கூறியிரு கிருர்கள்.[1]

ஸகுணப்ரும்ஹ ஸம்பந்தமான விசாரங்களை சேர்க்காமல் நிர்குணப்ரம்ஹ ஸம்பந்தமான

---

1. 'तत्वात्माऽहंप्रत्ययविषयत्वादुपनिषत्स्वेव विज्ञायते इत्यनु पपन्नम् । न. तत्साक्षित्वेन प्रत्युक्तत्वात् । न ह्यहंप्रत्ययविषयकर्तृ व्यतिरेकेण तत्साक्षी सर्वभूतस्थः सम एकः पुरुषो विधिकाण्डे तर्कसमये वा केन चिदधिगतः सर्वस्यात्मा । अतः स न केन चित प्रत्याख्यातुं शक्यः विधिशेषत्वं वा नेतुम् ॥'

(N. S. ब्र. सू. भा. पृ. 134)



[illegible]ங்களை மாத்திரம் நான்கு அத்யாயங்களில் [illegible]ப க்ரமப்படி விசேஷமாக நிரூபணம் [illegible]கிற "ஸம்க்ஷேப சாரீரகம்" என்ற க்ரந் [illegible] ஸ்ரீஸர்வக்ஞாத்ம ஸ்வாமிகள் செய்திருக் [illegible]ர்கள். நாம் மிகவும் சுருக்கமான வழியில் அத்யாயக்ரமங்களை மாற்றி, ஐந்து விஷயங்களைப் பற்றிச் சிந்தனை செய்வோம்.

### மோக்ஷமார்க்கம் (1)

மோக்ஷத்தையடைந்தாகவேண்டும், ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையடையவேண்டுமென்ற தீவ்ரமான ஆசை (मुमुक्षा) முதல் ஸாதனமாகும். அவ்வித ஆசைக்கு ஸம்ஸாரத்தில் வைராக்யம் வேண்டும். ஒரு வஸ்துவில் வெறுப்பு உண்டாக வேண்டுமானுல் அதிலிருக்கும் தோஷங்களை அடிக்கடி சிந்திக்கவேண்டும். அழகுள்ள வேசி யானாலும் அவளிடம் மஹாரோகமிருக்கிறது என்று அறிந்தவன் அவளிடம் ஆசைகொள்வதில்லை. ஆகவே தோஷதர்சனம் வைராக்யத்துக்குக் காரணம்.

"[illegible] वस्तुनि यत्र दोषः न तत्र पुंसोऽस्ति पुनः प्रवृत्तिः ।
[illegible]रोगवतीं विजानन् को नाम वेश्यामपि रूपिणीं व्रजेत् ॥"

ஸம்ஸாரகதியிலிருக்கும் துக்கங்களையும் தோஷங்களையும் சிந்தனை செய்வதே வைராக்யத் துக்குக் காரணம். உபநிஷத்துக்களில் பஞ்சாக்நி

வித்யையை நிரூபணம் செய்து 'न साज्जुगुप्सेत' என்று முடிவு காண்கிறது. ஆகையால், 3-வது அத்யாயத்தின் முதல் பாதம் அந்த ப்ரகரணத்தில் உள்ள வாக்யங்களின் தாத்பர்யத்தை விசாரித்து அதன் மூலமாக ஸம்ஸாரபந்தத்திலிருக்கும் தோஷங்களை எடுத்துக்காட்டி வைராக்யத்தை த்ருடப்படுத்துகிறது. ஆறு அதிகரணங்கள் அடங்கிய அந்த பாதத்தின் கருத்தை சிந்திப்போம்.

நித்யாநித்ய வஸ்துக்களின் விவேகம், சமதமாதிகள், வைராக்யம், மோக்ஷத்தில் தீவ்ரமான ஆசை இந்த நான்கு ஸாதனங்களுள்ளவனே சாரீரகமீமாம்ஸா சாஸ்திரத்தில் அதிகாரி என்று பாஷ்யத்தில் ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது. வைராக்யமடைந்த அதிகாரிக்கு சாஸ்திரத்தில் வைராக்யத்தை நிரூபணம் செய்வது பொருந்துமா என்ற ஸந்தேஹம் உண்டாகிறது. அந்த ஸந்தேஹத்திற்கு ஸமாதானம் பின்வருமாறு அறியவேண்டும். வ்யாகரணம் முதலிய அங்கங்களோடு வேதாத்யயனம் செய்த புருஷனுக்கு வேதவாக்யங்களிலிருந்து அர்த்தஞானமுண்டாகும். உபநிஷத்துக்களில் ப்ரம்ஹம் ஒன்றே ஸத்யம், நித்யம். மற்றவை அநித்யம். ஸம்ஸாரகதி பல துக்கங்களுள்ளது என்று அவனறிந்துகொள்வான். அதனுல் வைராக்யம் அவனுக்கு உண்டாகும். சில விஷயங்களில் ஸந்தேஹமேற்பட்டாலும்; ஹிதத்தைச் சொல்லும் பெரியோர்களின் வாக்



யத்தைக் கேட்டுத் தானறிந்த விஷயங்களில் நம்பிக்கை கொண்டு வைராக்யஸம்பந்நனுக ஆகி சாரீரக சாஸ்திரத்தை அப்யாஸம் செய்வான். அவனுக்கு முன்னுல் ஏற்பட்ட வைராக்யத்தை த்ருடப்படுத்துவதற்காக சாஸ்திரம் வைராக்யத்திற்கு வேண்டிய விஷயங்களை நிர்ணயம் செய்து கொடுக்கிறது.

ந்யாயம், வைசேஷிகம் என்ற தர்க்கசாஸ்திரங்களிலும், மோக்ஷம் பலன் என்றும், மேலே கூறிய வைராக்யம் முதலிய நான்குவிதமான ஸாதனங்களுள்ளவனே அதிகாரி என்றும் சொல்லியிருக்கிருர்கள். ஆயினும் ந்யாய சாஸ்திரத்தில் 4-வது அத்யாயத்தில்,

"विविधबाधनायोगाद्दुःखमेव जन्मोत्पत्तिः"

(ந்யா. ஸூ. 4-1-55)

முதலிய ஸூத்ரங்களால் வைராக்யமடைய சரீராதிகளில் துக்கபாவனை செய்யவேண்டுமென்று உபதேசிக்கப்பட்டிருக்கிறது. தேஹத்தைவிட வேருன ஆத்மா ஒன்று இருக்கிறதென்று அறிந்து கர்மானுஷ்டானம் செய்பவர்கள் தேஹமே ஆத்மா என்ற வாதத்தையும், அதன் நிராகரணத்தையும் சர்ச்சை செய்கிருர்கள். அவர்களால் படிக்க வேண்டியதாகச் சொல்லப்பட்ட நூல்களிலும் தேஹத்தைவிட வேருன ஆத்மா ஸ்தாபனம் செய்யப்பட்டிருக்கிறது. அவைகள் முன்னுலேயே

இருக்கும் ஞானத்தை த்ருடப்படுத்துவதற்காகவே ஏற்பட்டுள்ளன.

பஞ்சால தேசத்தரசன் ப்ரவாஹணஜைவலி ச்வேதகேதுவிடம் ஐந்து கேள்விகளைக் கேட்டான். அவைகளில் 5-வது கேள்வி,

"वेत्थ यथा पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति"

என்பது. ஜலங்கள் ஐந்தாவது ஆஹூதி த்ரவ்யமாகும்பொழுது புருஷரூபமாக பரிணமத்தை அடைவது எவ்விதமென்பது தெரியுமாவென்பது அதன் பொருள். அதற்குப் பதில் ச்வேதகேதுவுக்குத் தெரியவில்லை. பிறகு அவனுடைய பிதா ராஜாவை உபதேசம் செய்யும்படிக் கேட்டார். ராஜா அதற்குப் பதில் கூறுகிறார். பஞ்சாக்னி வித்யையைச் சொல்லி,

'इति तु पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्ति'

என்று உபஸம்ஹாரம் செய்திருக்கிறார். அக்னி ஹோத்ரம் செய்யும் யஜமானன் மரணத்திற்குப் பிறகு ஸூக்ஷ்மசரீரத்தோடு மேலே சென்று சந்திர லோகத்தில் ஸுகத்தை யனுபவித்துப் பிறகு அங்கிருந்து ஆகாசமாயும் வாயுவாகவும் மேகமாகவும் ஆகி பிறகு மழையாக பூமியிலிறங்கி நெல் முதலிய தான்யங்களாகி புருஷ ஸம்பந்தமேற்பட்டு வீர்ய ஸம்பந்தத்தால் ஸ்த்ரீயிடம் கர்பமாக வருகிறான். இந்த விபரம் கல்பனையாக பஞ்சாக்னி வித்யையில் சொல்லப்படுகிறது.



ஸாயங்காலத்திலும் காலையிலும் அக்னியில் ஹோமம் செய்யப்படும் பால் முதலிய ஆஹூதி த்ரவ்யம் ஜலம் மிகுந்ததாயிருப்பதால் 'आपः' என்ற சொல்லால் வழங்கப்படுகிறது. சிரத்தையோடு ஹோமம் செய்யப்படுவதால் அது 'வேச்ரத்தா' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. பஞ்சீகரணப்ரக்ரியை ப்ரகாரம் ஒவ்வொரு பூதத்திலும் மற்ற நான்கு பூதங்களும் கலந்திருப்பதால் 'आपः' என்ற பதம் இந்த ப்ரகரணத்தில் ஸூக்ஷ்ம பூதங்களைக் குறிக்கிறது.

அக்னிஹோத்ராஹூதிகளான அப் என்று சொல்லப்படும் ச்ரத்தை யென்ற (1) பூத ஸூக்ஷ்மங்கள் (1) அந்தரிக்ஷலோகம் என்ற அக்னியில் ஹோமம் செய்யப்பட்டபிறகு (2) ஸோமனாக பரிணமத்தை அடைகின்றன. (சந்திர லோகத்தில் அனுபவிக்கக்கூடிய ஜலமயசரீரமாக ஆகின்றன என்று கருத்து) ஸோமனாக பரிணமத்தை யடைந்த பூதஸூக்ஷ்மங்கள் (2) பர்ஜன்யன் (மழைக்கு உபகரணமான வஸ்துக்களின் அபிமானி தேவதை) என்ற அக்னியில் ஹோமம் செய்யப்பட்ட பிறகு (3) மழை ரூபமாக பரிணமத்தை அடைகின்றன. மழையாக பரிணமத்தை அடைந்த பூத ஸூக்ஷ்மங்கள் (3) பூமி என்ற அக்னியில் ஹோமம் செய்த பிறகு (4) நெல் முதலிய தான்யமாக பரிணமத்தை அடைகின்றன. தான்யமான பூத ஸூக்ஷ்மங்கள் (4) புருஷன் என்ற

அக்னியில் ஹோமம் செய்யப்பட்ட பிறகு (5) வீர்யமாக பரிணாமத்தை அடைகின்றன. வீர்யமான பூத ஸூக்ஷ்மங்கள் (5) ஸ்த்ரீ என்னும் அக்னியில் ஹோமம் செய்யப்பட்டபிறகு கர்பம் (சரீரம்) என்ற பரிணாமத்தை அடைகின்றன. आप: என்று சொல்லிய பூத ஸூக்ஷ்மங்கள் (1) श्रद्धा (2) सोमः (3) वृष्टिः (4) अन्नं (5) रेतः என்ற ஐந்து விதமான ஹோம த்ரவ்யமாகப் பிரித்து (1) द्युलोकः (2) पर्जन्यः (3) पृथिवी (4) पुरुषः (5) योषित என்ற ஐந்து அக்னிகளில் ஹோமம் செய்யப்படுகின்றன. ஐந்தாவது பரிணாமம் சரீரமாகிவிடுகிறது என்பது கருத்து. 'த்யுலோகம்' முதலியவைகள் அக்னியாகக் கல்பனை செய்யப்பட்டிருக்கின்றன. இவ்விதம் உபாஸனம் செய்பவன் உத்தரமார்க்கம் வழியாக ப்ரம்ஹலோகம் செல்கிறான். இது பஞ்சாக்னி வித்யையின் ஸாரம். வைராக்ய பாதத்தில் ஜீவர்கள் மரணமடைந்து வேறு உலகம் போய் திரும்பி வந்துகொண்டேயிருப்பது விசாரிக்கப்பட்டிருக்கிறது.

(1) முதல் அதிகரணத்தில்—கர்மானுஷ்டானம் செய்தவர்கள் வேறு உலகம் போவது சிந்திக்கப்படுகிறது. ஸம்ஸார துக்கத்துக்கு மூலமாயுள்ளது இந்திரியங்கள் பஞ்ச பூதங்கள் முதலியவைகளின் ஸங்காதமான தேஹத்தின் ஸம்பந்தமே. ஜீவன் மரண காலத்தில் இந்திரியங்களோடும், அதற்கு ஆதாரமாயுள்ளதும், வேறு சரீரத்தை யுண்டு பண்ணுவதற்கு ஸாதனமாயுமுள்ள பூத ஸூக்ஷ்மங்



களோடும் 'த்யுலோகம்' போகிறான் என்று தீர்மானித்ததால் ஸூக்ஷ்மசரீர ஸம்பந்தம் போகும் போதும் திரும்பிவரும் போதும் உள்ளது, ப்ரம்ஹ ஞானமுண்டாகும் வரையிலிருக்குமென்று ஸித்திப்பதால் ப்ரும்ஹ ஞானம் வரும் வரையில் துக்கமிருந்துகொண்டேயிருக்குமென்றும், சந்திரலோகத்தில் சரீரத்தை அடைந்தும் அங்கு தேவர்களுக்கு வேலைக்காரர்களாக அவர்களுடன் வஸிக்கிறார்களென்று தீர்மானம் செய்ததால், இவ்வுலகில் தேவர்களுக்கு பசு போலுழைத்து, கர்மாவை செய்ததுபோல் அங்கும் அவர்களின் வேலைக்காரனாயிருந்து அதனாலுண்டாகும் க்லேசத்தோடு கூடிய ஸ்வர்கஸுகானுபவம் துச்சமானதென்றும், வைராக்யம் த்ருடப்படுத்தப்படுகிறது.

(2) இரண்டாவது அதிகரணத்தில்-ஸ்வர்க்கத்தில் ஸுகானுபவத்தைக் கொடுக்கும் கர்மா முழுவதும் அனுபவத்தால் நாசமடைந்த பிறகு, முன்பேயிருக்கும் மற்ற கர்மாவினால் அதன் பலனை அனுபவிக்கத் திரும்புகிறான் என்று தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. இதனால் ஸூக்ஷ்ம தேஹத்துக்கும் காரணமாயும் ஸகலவித க்லேசத்துக்கும் காரணமுமான கர்மபந்தம் போகும்போதும் வரும் போதுமிருக்கிறது. பலவித தோஷங்களுடன் கூடிய ஸ்வர்க்க ஸுகத்தைக் கொடுக்கும் யாகம் முதலிய கர்மாக்கள், ஒவ்வொரு ஜன்மத்திலும் உயிருள்ள வரையில் செய்ய வேண்டிய ஸ்நானம் ஸந்தியா

வந்தனம் முதலிய ஸதாசாரத்தோடு செய்தவை
களே பலனைக்கொடுப்பதால் கர்மாக்களை செய்வதும்
மிகவும் கடினமானது என்று வைராக்கியம்
த்ருடப்படுத்தப்படுகிறது.

(3) மூன்றாவது அதிகரணத்தில் - யாகம்
முதலியவைகளைச் செய்யாமல் பாப கர்மாக்களை
செய்பவர்கள் ஸ்வர்க்கத்திற்குப்போவதில்லை, அவர்
கள் போகும் வழியில் கூட ஸ்வர்கமில்லை, அவர்கள்
யமலோகம் சென்று ரௌரவம் முதலிய நரகங்களில்
யமனுக்கு வசமாகி பலவிதமான துக்கங்களை
யனுபவித்துத் திரும்பி இவ்வுலகம் வருகிறார்கள்,
என்பதை விஸ்தாரமாய் சொல்லியிருப்பதால்
வைராக்யம் த்ருடப்படுகிறது.

(4) நான்காவது அதிகரணத்தில்—சந்திர
லோகத்தில் அனுபவிக்கவேண்டிய சரீரம் ஸ்வர்க்க
ஸுகானுபவம் முடிந்தவுடன் உருகி ஆகாசம்
போல ஸூக்ஷ்மமாகி வாயுவினால் இங்குமங்கும்
தள்ளப்பட்டு புகை முதலியவைகளோடு ஸம்பந்தப்
பட்டு மேகமாகி வர்ஷிக்கிறது.

'यथेतमाकाशमाकाशाद्वायुं वायुर्भूत्वा धूमो भवति'
என்ற வாக்யங்களுக்கு ஆகாசமாயும் வாயுவாயும்
ஆகிறான் என்று பொருளல்லவென்று தீர்மானம்
செய்யப்பட்டிருக்கிறது. அதிலிருந்து ஆகாசமாக
ஆனால் ஆகாசாபிமானி தேவதையாகி அதனுடைய
ஸுகானுபவம், திரும்பிவரும் சமயத்திலிருக்கு



மென்ற ஸந்தேஹத்துக்கும் இடமில்லை, என்று
வைராக்யம் த்ருடமாகிறது.

(5) ஐந்தாவது அதிகரணத்தில்—ஆகாசத்துக்கு
ஸமமாக இருப்பதெல்லாம் சிறிதுகாலத்திற்குத்தான்
என்று நிர்ணயம்செய்ததிலிருந்து, அதன்பிறகு நெல்
முதலியவைகளாக வெகுகாலமிருக்கவேண்டுமென்று
விதிப்பதால் வைராக்யம் த்ருடப்படுகிறது.

(6) ஆறாவது அதிகரணத்தில்,— 'तिलमाषा इति
जायन्ते' என்ற வசனத்தால் பூமியில் எள்ளாகவும்,
உளுந்தாகவுமுண்டாகிறான் என்பதில்லை. அப்படி
யானால் ஓஷதியின் அபிமானியான ஜீவனுக்கு
அதை அறுவடை செய்யும் வரையில்தான் க்லேசம்
என்று நினைக்கலாம். கர்மாவை சுட்டிக்காட்டாமல்
'जायन्ते' என்று சொல்லியிருப்பதால் வேறு ஜீவனா
லனுபவிக்கப்படும் பயிர்களில் ஸம்பந்தப்படுகிறான்
என்பது கொள்ளவேண்டும். ஆகவே தான்யம்
முளைத்து அறுவடையாகி பாகம் செய்து சாப்பிட்டு
அதன் ரஸம் வீர்யமாகும்வரையிலுமதனுடன்
ஸம்பந்தமிருக்கும். புருஷனின் வீர்யத்தோடு
ஸம்பந்தமிருந்தும் ஸ்த்ரீகளின் கர்பகோளத்தில்
வீர்யஸம்பந்தமேற்பட்ட பிறகுதான் சரீரமுண்டா
கிறது என்று, சரீரமுண்டாகும் வரையில் மிகவும்
கடினமான கதியை நிரூபணம் செய்வதால்
வைராக்யம் த்ருடப்படுத்தப்பட்டது.

[1] கர்பமாக மாதாவின் குக்ஷியிலிருக்கும்பொழுது மலங்களில் படுத்திருப்பதையும், வெளியில் குழந்தையாகப் பிறந்த பிறகு தன்னுடைய மலமூத்திரங்களிலேயே தானாகத் திரும்பக்கூட முடியாமல்

---

1. பகவத்பாதர்கள் सर्ववेदान्तसिद्धान्तसंग्रहः என்ற ப்ரகரண க்ரந்தத்தில் அடியில் குறிப்பிட்ட ச்லோகங்களால் தோஷ சிந்தனையை வைராக்யத்துக்கு முக்கிய ஸாதனமாகக் கூறியுள்ளார்கள்.

कुक्षौ स्वमातुर्मलमूत्रमध्ये स्थितिं तदा विट्क्रिमिदंशनं च ।
तदीयकौक्षेयकवह्निदाहं विचार्य को वा विरतिं न याति ॥

स्वकीयविण्मूत्रनिमज्जनं तथोत्तानगत्या शयनं तदा यत् ।
बालग्रहाद्याहतिभाक् च शैशवं विचार्य को वा विरतिं न याति ॥

स्वीयैः परैस्ताडनमज्ञभावमत्यन्तचापल्यमसत्क्रियां च ।
कुमारभावे प्रतिषिद्धवृत्तिं विचार्य को वा विरतिं न याति ॥

मदोद्धतिं मान्यतिरस्कृतिं च कामातुरत्वं समयातिलङ्घनम् ।
तां तां युवत्योदितदुष्टचेष्टां विचार्य को वा विरतिं न याति ॥

विरूपतां सर्वजनादवज्ञां सर्वत्र दैन्यं निजबुद्धिहैन्यम् ।
वृद्धत्वसंभावितदुर्दशां तां विचार्य को वा विरतिं न याति ॥

पित्तज्वराशःक्षयगुल्मशूलश्लेष्मादिरोगोदिततीव्रदुःखम् ।
दुर्गन्धमस्वास्थ्यमनूनचिन्तां विचार्य को वा विरतिं न याति ॥

अङ्गारनद्यां तपनेऽपि कुम्भीपाकेऽप्यवीच्यामसिपत्रकानने ।
दूतैर्यमस्य क्रियमाणबाधां विचार्य को वा विरतिं न याति ॥



படுத்திருப்பதையும், குமாரனாக இருக்கும் ஸமயத்தில் பிறரிடமடிபடுவதையும், ஒன்றுமறியாமலிருப்பதையும், தருணாவஸ்தையில் மதம் பிடித்து பெரியோர்களை அவமதித்தலையும், காமவசமாயிருப்பதையும், சாஸ்திரங்களை மீறி நடப்பதையும், வயது முதிர்ந்த காலத்தில் ஸௌந்தரமான வடிவமெல்லாம் குரூபமாவதையும், எல்லோராலும் அவமதிக்கப் படுவதையும், கார்யாகார்யங்களில் சொந்தமான புத்தியில்லாததையும், பலவிதமான தீர்க்க ரோகங்களையும், சரீரம் ஸ்வாதீனமில்லாமலிருப்பதையும், அடிக்கடி நினைக்க நினைக்க பிறப்பு இறப்பு என்ற ஸம்ஸாரபந்தத்தில் தீவ்ரமான வைராக்யமேற்படும். இந்த வைராக்யமே மோக்ஷத்தையடைய முக்ய ஸாதனமாகும்.

இவ்விதம் தோஷங்களை சிந்தனை செய்து தீவ்ரமான வைராக்யமடைந்தவன் ஸம்ஸார பந்தத்தின் விடுதலையென்ற மோக்ஷத்தையடைய அதற்கு நேரான ஸாதனத்தை ஸம்பாதிக்க வேண்டும்.

மோக்ஷம் ஆத்மஞானத்தால் உண்டாகிறது என்று பாதராயண மஹரிஷி சொல்லுகிறார். ஆத்மஞானம் மோக்ஷ காரணமில்லையென்று ஜைமினி மஹரிஷி சொல்லுகிறார். ஜைமினியின் மதத்தை விஸ்தாரமாக நிராகரணம் செய்து, ஆத்மஞானமே மோக்ஷ ஸாதனமென்று புருஷார்த்தாதிகரணத்தில்

(ब्र. सू. 3-4-1) வ்யாஸர் நிரூபணம் செய்கிருர். அதன் விபரம் பின்வருமாறு :—

'तरति शोकमात्मवित्' (छा. ७-१-३) 'ब्रह्मविदाप्नोति परम्' (तै. २-१)

முதலிய ச்ருதி வாக்யங்கள், ஆத்மஞானம் சோக நிவிருத்தியென்ற மோக்ஷ புருஷார்த்தத்தைக் கொடுக்கிறது என்று கூறுகின்றன. ஆயினும் யாகத்திற்கு அங்கமான் கர்தாவிற்கு ஆத்மஞானம் ஒரு ஸம்ஸ்காரம். அதற்குப் பலன் சொல்லி யிருப்பது அர்த்தவாதமே.

यस्य पर्णमयी जुहूर्भवति न स पापं श्लोकं शृणोति ।

என்ற வாக்யம், ஜுஹூ என்னும் பாத்ரத்தை பலாச மரத்தால் செய்தால் அவன் தன்னைப் பற்றிக் குறைகளைச் சொல்லும் வார்த்தைகளைக் கேட்கமாட்டான் என்று கூறுகிறது. இது அர்த்தவாதம். ஜுஹூ என்ற பாத்ரம் யாகத் தோடுதான் ஸம்பந்தமுள்ளது. அதுபோல தேஹத்தைவிட வேருன நித்யமான ஆத்மா வைதிக யாகாதி கர்மாவோடு நியதமான ஸம்பந்தமுள்ளது. ஆகையால் ஆத்மஞானம் யாகத்தின் அங்கமான கர்த்தாவிற்கு ஸம்ஸ்கார மாவதால் க்ரத்வர்த்தமாகிறது. அதற்கு ஸ்வ தந்த்ரமான பலனில்லை.

'यदेव विद्यया करोति तदेव वीर्यवत्तरं भवति ।' (छा. १-१-१०)



என்ற வாக்யம் ஞானத்தால் செய்யும் கர்மாவே அதிக வீர்யமுள்ளதாயிருக்கிறது என்று கூறுவ தாலும், ஆத்மஞானம் கர்மாவுக்கு அங்கமானது.

'कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेच्छतं समाः ।' (ईशा. २)

என்ற ச்ருதி எப்பொழுதும் கர்மாவைச் செய்து கொண்டேயிருக்கவேண்டுமென்று நியமத்தைச் சொல்லியிருப்பதாலும் ஆத்மஞானம் கர்மாவிற்கு அங்கம். ஸ்வதந்த்ரமாகப் புருஷார்த்தத்தைக் கொடுக்காது என்று ஜைமினி மஹரிஷி கூறுகிருர்.

சரீரத்தைக் காட்டிலும் வேருன ஆத்மா, கர்த்தா, போக்தா, நித்யன் என்பதை மாத்திரம் உபநிஷத்துக்கள் நிரூபணம் செய்திருந்தால் அந்த ஞானம் கர்மாவிற்கு அங்கமாகுமென்று நினைக்க லாம். ஆனல் உபநிஷதங்கள் ஜீவாத்மாவை வாஸ்தவத்தில் கர்த்ருத்வம், போக்த்ருத்வம் முதலிய தர்மங்களில்லாத அஸங்கோதாஸீனமான ப்ரும்ஹஸ்வரூபமாக உபதேசம் செய்கின்றன. இவ்விதமான ஆத்மஞானமுள்ளவன் தன்னைக் கர்த்தாவென்று நினைக்கமாட்டான். கர்த்தா என்ற எண்ணமில்லாதவன் கர்மாவைச் செய்ய மாட்டான். ஆகவே உபநிஷதங்களில் சொல்லிய ஆத்மஸ்வரூபஞானம் கர்மாவிற்கு விரோதியாகும். கர்மாவிற்கு அங்கமாயிருக்க முடியாது.

'यत्र वा अस्य सर्वमात्मैवाभूत् तत्केन कं पश्येत् ।' (बृ. ४-४-१४)

என்ற ச்ருதி ஆத்மஞானிக்கு கர்மாவை அனுஷ்டானம் செய்யவேண்டியதற்கான ஞானமே கிடையாது என்று கூறுகிறது.

'कुर्वन्नेवेह कर्माणि' (ईशा. २) என்ற வாக்யம் ஆத்மஞானி உயிருள்ள வரையில் கர்மாக்களைச் செய்துகொண்டே இருந்தாலும் அவனிடம் கர்மாக்கள் ஒட்டாதென்று ஞானத்தை ஸ்தோத்ரம் செய்கிறது.

'यदेव विद्यया' என்ற வாக்யம் உத்கீத வித்யையைப்பற்றிக் கூறுகிறது. ஆத்மஞானத்தைச் சொல்லவில்லை. ஆத்மஞானிகள் கர்மாவை விட்டுவிட்டார்கள்,

'एतद्धस्म वै तत्पूर्वे विद्वांसः अग्निहोत्रं न जुहवाञ्चक्रिरे'-

என்று கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் ஆத்மஞானம் ஸ்வதந்த்ரமாக மோக்ஷபுருஷார்த்தத்தைக் கொடுக்கிறது என்று பாதராயண மஹரிஷி நிர்ணயம் செய்திருக்கிறார்.

மேலும், மோக்ஷம் என்பது நித்யமான புருஷார்த்தம். அது உண்டாக்கப்படுவதில்லை. உண்மையான ஸச்சிதானந்த ஸ்வரூபம் அவித்யையால் மறைந்திருக்கிறது. அவித்யை என்னும் மறைவு விலகினால் நித்யஸித்தமான மோக்ஷம் அடையப்படுகிறதென்று கூறுகிறார்கள்.



'तमसः पारं दर्शयति भगवान् सनत्कुमारः' (छा. ७-२६-२)

என்ற வேதம் மோக்ஷ ப்ரதிபந்தகத்தின் நிவிருத்தியை ஞானத்தின் பிரயோஜனம் என்று கூறுகிறது. வெளிச்சத்தால் இருட்டு நிவிருத்தியையடைவதுபோல அவித்யையென்ற அக்ஞானம் ஞானத்தாலே நிவிருத்தி யடையும்.

அக்ஞானத்தால் ஸ்வரூபம் மறைந்திருப்பதால் ஸம்ஸாரபந்தம் என்பதை பாதராயணர் மூன்ருவது அத்யாயத்தில்,

पराभिध्यानात्तु तिरोहितं ततो ह्यस्य बन्धविपर्ययौ (ब्र. सू. ३-२-५) देहयोगाद्वा सोऽपि (ब्र. सू. ३-२-६)

என்ற இரண்டு ஸூத்ரங்களால் நிரூபணம் செய்திருக்கிறார்.

हि - यस्मात् । ततः - तिरोभावादेव अस्य बन्धमोक्षौ ।

ஸ்வரூபத்தின் மறைவால் ஸம்ஸாரபந்தம். பந்தமிருந்தால்தான் அதற்கு விடுதலை. ஆகவே பந்தம், மோக்ஷம் இரண்டும் திரோபாவத்தாலே ஏற்படுகிறது.

सोऽपि तिरोभावः देहयोगाद्वा-अविद्यारूपकारणदेहयोगादेव ।

சரீரம் ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரண சரீரம் என்று மூன்றுவகைப்படும். ஸ்தூலம் அன்னமய

சரீரம், ஸூக்ஷ்மம் லிங்க சரீரம், காரண சரீரம் அவித்யை. இங்கு ஸூத்ரத்தில் वा என்பதற்கு एव என்று பொருள். ஜைமினியின் ஸூத்ரங்களில் இந்த ப்ரயோகத்தை வெகுவாகக் காணலாம். இந்த ஸூத்ரங்களின் அர்த்தம் ஸ்ரீ ப்ரம்ஹானந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள் கூறியபடி சொல்லப்பட்டது.

सोऽपि तु जीवस्य ज्ञानैश्वर्यतिरोभावः देहयोगात् देहेन्द्रियमनोबुद्धिविषयवेदनादियोगात् भवति

(N. S. ब्र. सू. भा. पृ. ६९३)

என்று ஆசார்ய பாஷ்யம். இங்கு आदि என்ற பதத்தால் காரண சரீரமான அவித்யை சொல்லப்படுவதாக 'ரத்னப்ரபா' விலும் 'ந்யாயநிர்ணய'த்திலும் கூறப்பட்டிருக்கிறது.

'अहं ब्रह्मास्मि' என்ற அபேதானுபவ ஞானமே மோக்ஷ ஸாதனம்.

'तदात्मानमेवावेदहं ब्रह्मास्मीति, तस्मात्तत्सर्वमभवत्' (बृ. ३-४-१०) என்ற ப்ருஹதாரண்யக வாக்யம் அபேத ஞானத்தால் ஸர்வபாவம் என்று சொல்லப்படும் மோக்ஷம் அடைவதாகக் கூறுகிறது.

'तत्र को मोहः कः शोकः एकत्वमनुपश्यतः' (ईशा. ७) என்ற ச்ருதி அபேதானுபவமுள்ளவனுக்கு சோக மோஹம் கிடையாது. (சோக மோஹ நிவிருத்தியென்னும் மோக்ஷமடையப் படுகிறது) என்று



சொல்லுகிறது. 'एकधैवानुद्रष्टव्यम्' (बृ.६-४-२०) என்ற வாக்யமீ அபேதத்தையே அறியவேண்டு மென்று நிருபணம் செய்கிறது.

तत्त्वमस्यादिवाक्योत्थं ज्ञानं मोक्षस्य साधनम् ।
ज्ञाने त्वनाहते तस्मिन् सर्वं ब्रह्ममयं भवेत् ॥

என்று ப்ருஹந்நாரதீய புராணம் கூறுகிறது.

'अहमेव परं ब्रह्म वासुदेवाख्यमव्ययम् ।
इति स्यान्निश्चितो मुक्तः बन्धवानन्यथा भवेत् ॥'

என்பது தக்ஷஸ்மிருதி வாக்யம்.

ஞானம் அக்ஞான நிவிருத்தியைச் செய்ய கர்மாவின் ஸஹாயத்தை வேண்டுவதில்லை. ஆனால் ஞானுண்டாவதற்கு சித்தத்திலிருக்கும் கல்மஷங்களைப் போக்க கர்மாக்களை யபேக்ஷிக்கிறது. இந்த கருத்தாலேயே தான்,

'अत एव चाग्नीन्धनाद्यनपेक्षा' (ब्र. सू. ३-४-२५)

என்ற ஸூத்ரத்தில் கர்மாவின் அபேக்ஷையில்லையென்றும், 'सर्वापेक्षा च यज्ञादिश्रुतेः' (ब्र. सू. ३-४-२६) என்ற ஸூத்ரத்தில் கர்மாபேக்ஷை யுண்டென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்திரியங்களினடக்கம் முதலியவைகளும் வேண்டியவை. ஆகவே கர்மாக்கள் ஞானத்திற்கு பஹிரங்கஸாதனம் आरादुपकारकं என்றும், சமதமாதிகள் அந்தரங்கமென்றும் கூறப்

படுகிறது. ஸகுணோபாஸநங்கள் சித்தத்தின் ஏகாக்ரதையை கொடுக்கிறது. எல்லாம் ஈச்வர ப்ரஸாதமில்லாமல் கிடைக்காது என்று,

'फलमत उपपत्तेः (ब्र. सू. ३ २-३८) श्रुतत्वाच्च (ब्र. सू. ३-२-३९) 'पूर्वं तु बादरायणो हेतुव्यपदेशात्' (ब्र. सू. ३-२ ४१)

என்ற ஸூத்ரங்களால் நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது. அசேதநமான கர்ம பலனைக்கொடுக்காது. எல்லாவற்றிற்கும் அத்யக்ஷனான ஸர்வேச்வரன் விசித்ரமான ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை செய்வார். கர்மாவை செய்தவர்களுக்கு கர்மாவுக்குத்தக்கபலனைக் கொடுக்கிறார் என்பது பொருத்தமானது. 'वसुदानः' (बृ. ६-४-२४) என்று ச்ருதியிலும்,

'लभते च ततः कामान् मयैव विहितान्हितान्' (भ. गी ७-२१)

என்று ஸ்மிருதியிலும் சொல்லியிருப்பதால் நல்ல கர்மாவைச் செய்தால் ஈசுவரனுக்கு நம்மிடம் ப்ரஸாதமுண்டாகிறது. அதனால் நல்ல பலனைக் கொடுக்கிறார். பாப கர்மாவைச் செய்தால் கோபம் உண்டாகி கெடுதலான பலனைக் கொடுக்கிறார். கர்மாவே அபூர்வம் வழியாகப் பலனைக் கொடுப்பதில்லையென்பது அந்த ஸூத்ரங்களின் தாத்பர்யம். ஆகவே ஈச்வரப்ரஸாதம் ஒரு முக்ய ஸாதனம். அதையடைய ஈச்வர பக்தி அவச்யமானது. வைராக்யமும், குருவிடமிருந்து உபதேச ச்ரவணம், மனனம், த்யானம் முதலியவை



செய்வதும் காமாக்ஷியின் பிரஸாதத்தாலே உண்டாகிறதென்று மூகபஞ்சசதியில் நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது.

शिव शिव पश्यन्ति समं श्रीकामाक्षीकटाक्षिताः पुरुषाः ।
विपिनं भवनममित्रं मित्रं लोष्टञ्च युवतिबिम्बोष्ठम् ॥

—ஆர்யாசதகம் சு. 48.

सूक्ष्मेऽपि दुर्गमतरेऽपि गुरुप्रसाद-
साहाय्यकेन विचरन्नपवर्गमार्गे ।
संसारपङ्कनिचये न पतत्यमूं ते
कामाक्षि गाढमवलम्ब्य कटाक्षयष्टिम् ॥

—கடாக்ஷ சதகம் சு. 40.

सत्कृतदेशिकचरणाः सबीजनिर्बीजयोगनिःश्रेण्या ।
अपवर्गसौधवलभीमारोहन्त्यम्ब केऽपि तव कृपया ॥

—ஆர்யா சதகம் சு. 97.

பகவத்பாதர்களும் ப்ரகரண க்ரந்தங்களில் எல்லாவற்றிற்கும் ஈச்வரப்ரஸாதம் வேண்டும். அதை ஈச்வர பக்தியால் அடையவேண்டுமென்று நிரூபணம் செய்திருக்கிறார்கள்.

शिवप्रसादेन विना न सिद्धिः शिवप्रसादेन विना न बुद्धिः ।
शिवप्रसादेन विना न युक्तिः शिवप्रसादेन विना न मुक्तिः ॥

यस्य प्रसादो बहुजन्मलभ्यः भक्त्येकगम्यो भवमुक्तिहेतुः ।

—ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம்
சு. 279, 280

இந்த வழியாக ஈச்வர ப்ரஸாதமுபயோகப்படுகிறதென்ற தாத்பர்யத்தில்

यस्य प्रसादात्परमार्तिरूपादस्मात्संसारान्मुच्यते नापरेण ।

என்ற ச்ருதி அமைந்திருக்கிறது. அவித்யா நிவிருத்தியென்ற பந்தநிவிருத்திக்கு ஞானமே நேரிடையான ஸாதனம். வேறு ஒன்றுமில்லை. அதை அடைய வைராக்யம், கர்மா, சமதமாதிகள், ச்ரவண, மனன, த்யானங்கள் ஈச்வர ப்ரஸாதம் இவைகள் எல்லாம் அபேக்ஷிக்கப்படுகின்றன.

## (2) ப்ரபஞ்சதத்வம்

"நான் இரண்டாவதான த்வைத ப்ரபஞ்ச மற்ற ப்ரும்ஹமாக இருக்கிறேன்" என்னும் ஸாக்ஷாத்காரம் மோக்ஷத்திற்கு ஸாதனம். அதை அடைய ப்ரபஞ்சம், நான் என்ற ஜீவன், ப்ரும்ஹம் இவைகளின் தத்வத்தை சிந்திக்கவேண்டும்.

முதலில் ப்ரபஞ்சத்தின் தத்வத்தை விசாரிப்போம். பலவிதமான த்வைத ப்ரபஞ்சம் ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தால் அறியப்படுகிறது. அதை அனுபவிக்கும் போக்தாவான ஜீவனும் அவைகளைவிட வேருக அறியப்படுகிருன். ஆகையால் பேத ப்ரத்யக்ஷத்தின் விரோதமிருப்பதால் அத்வைத ப்ரும்ஹ



மென்பது பொருந்தாது என்ற ஆக்ஷேபம் வருகிறது. இதற்கு த்வைத ப்ரபஞ்சம் பரமார்த்த ஸத்யமல்ல மித்யையானது, அதனுல் அத்வைத ப்ரும்ஹம் ஸித்திப்பதில் விரோதமில்லை என்று ஸமாதானம் சொல்லுவதற்காக பாதராயணர்

[1] "तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः" (ब्र. सू. २-१-१४)

என்னும் அதிகரணத்தில் ப்ரபஞ்சம் மித்யை என்று ப்ரமாணங்களால் நிருபணம் செய்திருக்கிருர். அபௌருஷேயமான வேதசப்தங்கள் புருஷதோஷத்தாலுண்டாகக்கூடிய ப்ரத்யக்ஷப்ரமாணத்தைவிட ப்ரபலமான ப்ரமாணமானதால் ப்ரத்யக்ஷ விஷயமான த்வைத ப்ரபஞ்சம் வைதிக சப்தங்களால் மித்யை என்று ஸித்திக்கிறது. ஆகவே ப்ரும்ஹம் த்வைத ப்ரபஞ்சமற்றது. आरम्भणं முதலிய சப்தங்களாலும், அர்த்தாபத்தி ப்ரமாணங்களாலும் த்வைத ப்ரபஞ்சம் மித்யையென்று ஸித்திக்கிறது.

சாந்தோக்யோபநிஷத்தில் (6வது அத்யாயத்தில்) உத்தாலகர், தன் புத்ரன் ச்வேதகேதுவைப்

---

1. तस्य ब्रह्मणः, अनन्यत्वं – अन्यशून्यत्वं अद्वयत्वमिति यावत् । "यथा सोम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातं स्यात् वाचारम्भणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम् । एवं सोम्य स आदेशः" इत्याद्यारम्भणशब्दोपलक्षितश्रुत्यादिभ्यः ॥
(वे. सू. मु. पृ. 78)

பார்த்து, ஒன்று தெரிந்தால் எல்லாம் தெரியும் அந்த வஸ்து உபதேசத்தால் மட்டும் தெரிந்து கொள்ளமுடியும், அதை நீ குருவிடம் கேட்டாயா என்றுகேட்டார். ஒன்றின் அறிவினால் மற்ற வஸ்து வின் அறிவு அஸம்பாவிதமென்ற எண்ணத்தால்

**'कथं नु भगवः स आदेशः'** (छा. ६-१-३)

என்று தகப்பனாரை ச்வேதகேது கேட்டான். அதற்கு உதாஹரணங்காட்டி உத்தாலகர் பதில் கூறுகிறார்.

மண் ஒன்றைத் தெரிந்துகொண்டால் மண்ணின் விகாரமான மண்மயமான குடம், தோண்டி, சட்டி முதலியவைகளெல்லாம் அறியப் படுகின்றன. குடம் முதலியவை மண்ணைக்காட்டி லும் வேறில்லை. மண் குடம் என்று குடம் மண்ணாகவே அறியப்படுகிறது. குடம் மண்ணாக யிருந்தது என்று ஸத்கார்யவாதத்தின் முடிவு. மண்தான் குடம் என்று கொண்டால் குயவன் செய்யவேண்டிய வேலைகள் வேண்டாம். மண் உருண்டையாலேயே ஜலத்தைக்கொண்டு வரும்படி நேரிடும். ஆகவே மண்ணைவிட வேறாகவோ, மண்ணை விட வேறில்லையென்றே சொல்ல முடியாத அநிர்வசநீயமானது குடம் முதலிய விகாரம். குடம் சட்டி முதலிய வாக்கினால் சொல்லப்படுகின்றது பெயரளவுதான். குடம் முதலிய விகாரங்களின் தத்துவம் மண்தான். 'அதுவே ஸத்யமானது.



மண் தெரிந்தால் மண்ணின் விகாரங்களின் தத்வ மறியப்படுகிறது. அதுபோல ஒன்றையறிந்தால் எல்லாவற்றையுமறியலாம் என்று பதில் கூறினார்.[1]

காரணம் தான் ஸத்யமென்று சொல்லுவதானால் '**मृत्तिकेव सत्यं**' என்று சொல்வதுதான் பொருத்த மானது என்ற ஸந்தேஹம் வரும். அதன் பரிஹாரம் பின் வருமாறு — உதாஹரணமாகச் சொல்லிய மண் பரமார்த்த ஸத்யமல்ல. அதுவும் ஒரு ப்ருதிவீபூதத்தின் விகாரம். ஆகவே அதன் தத்வம் அதன் காரணம். அதுவும் பரமார்த்த ஸத்யமல்ல. அதற்குக் காரணமே அதன் தத்வம், பரமார்த்த ஸத்யமென்று கொள்ளவேண்டும். இந்த விஷயத்தைப் போதிப்பதற்காக '**मृत्तिकेत्येव सत्यं**' என்று **इति** என்ற சப்தத்தைச் சேர்த்து. வேதம் கூறியிருக்கிறது. **इति** என்பதற்கு **आदि** முதலானது

---

1. वाचारम्भणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम् । वाचया केवलमारभ्यते विकारजातम् । न तु तत्त्वतोऽस्ति । यतो नामधेयमात्रमेतत् । यथा पुरुषस्य चैतन्यं, राहोः शिरः, इति विकल्पमात्रम् । यथाऽऽहुर्विकल्पविदः – 'शब्दज्ञानानुपाती वस्तुशून्यो विकल्पः' इति । तथा चावस्तुतयाऽनृतं विकारजातं, मृत्तिकेत्येव सत्यम् । तस्मात् घटशरावोदञ्चनादीनां तत्त्वं मृदेव । तेन मृदि ज्ञातायां तेषां सर्वेषामेव तत्त्वं ज्ञातं भवति ॥ (N. S. सू. भा. पृ. 455) इति भामती ॥

என்று பொருள். கோசத்தில் इति என்ற சப்தத்திற்கு आदि என்ற பொருள் கூறப்பட்டிருக்கிறது. (न्यायवात्तिकं) ந்யாய வார்த்திகம் முதலிய பழைய நூல்களில் அவ்விதம் ப்ரயோகமும் காணப்படுகிறது.

[1]वाचारम्भणं विकारः என்ற வாக்யத்துக்கு ஸ்ரீ ப்ரும்ஹாநந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள் नामधेयं, वाचारम्भणं என்ற இரண்டு பதங்களும் மித்யை என்று போதிப்பதால் புநருக்தி வருமோ என்ற ஸந்தேஹத்திற்கு இடமில்லாமலும், கார்யமாக இல்லாத த்ருச்யமும் மித்யை என்று போதிப்பதாகவும் வியாக்யானம் செய்திருக்கிறார்கள். वाचारम्भणं என்பது ஒரு பதமல்ல. वाचा, आरंभणं என்று இரண்டு பதங்கள். आरम्भणं உண்டாகும் கார்யம் எல்லாம் वाचा வாக்குத்தான். அதுபோல விकारः உண்டாகாமல் அனாதியானதும், விநாசமடைவதால் விகாரத்தையுடையதுமான அவித்யாதிகளும் नामधेयं பெயரளவுதான் (மித்யை). मृत्तिकेति

---

1. आरम्भणं — आरभ्यमाणं कार्यमात्रम्। वाचा—वागेव। न केवलं कार्यमात्रं, तथाऽनादिदृश्यमपि विकारः—विनाशित्वेन विकृतं नामधेयं—नाममात्रं मृत्तिकेति गृह्यमाणं, विकृतत्वेन यदज्ञायमानं तदिति यावत्॥ (वे सू. मु. पृ. 69-70) इति वेदान्तसूत्रमुक्तावलिः॥



ம்ருத்திகை என்று அறியப்படும் வஸ்து, அதாவது விகாரத்தையடைந்ததாக அறியப்படாததுதான் ஸத்யமென்று நிரூபணம் செய்திருக்கிறார்கள். இவ்விதம் वाचारम्भणं विकारः என்று வேத சப்தம் கூறியதால் ப்ரும்ஹத்தின் விகாரமான ப்ரபஞ்சம் அநிர்வசநீயம் மித்யை, அதன் தத்வம் காரணமான ஸத்யமான ப்ரும்ஹமே என்று ஸித்திக்கிறது.

मृत्तिकेत्येव सत्यं என்று एव சப்தமிருப்பதால் காரணமான மண் முதலியவையே ஸத்யம், விகாரமானதெல்லாம் அஸத்யம் மித்யை என்று ஸித்திக்கிறது.

'मायां तु प्रकृतिं विद्यात्' (श्वेताश्वतर उप. ४-१०) என்ற ச்ருதியில் ஜகத்தின் ப்ரகிருதியை माया என்ற சப்தத்தால் சொல்லியிருப்பதாலும் ப்ரபஞ்சம் மித்யை என்று கொள்ளவேண்டும்.

ऋतेऽर्थं यत्प्रतीयेत न प्रतीयेत चात्मनि।
तद्विद्यादात्मनो मायां यथाऽऽभासो यथा तमः॥

என்ற பாகவத ச்லோகம் மாயா என்ற பதத்திற்கு மித்யை' என்று அர்த்தம் கூறுகிறது. உலக ப்ரகிருதி மித்யை ஆனதால் அதன் விகாரமான உலகமும் மாயிகம், மித்யை, அநிர்வசநீயம் என்று ஸித்திக்கிறது.

மேலும் 'नेह नानास्ति किञ्चन' (बृह. उ ६-४-१९) என்ற ச்ருதியில் ப்ரபஞ்சத்திற்கு ஆதாரமான முன் சொல்லப்பட்ட ப்ரும்ஹத்தில் த்வைத ப்ரபஞ்சம் **नास्ति** என்று நிஷேத சப்தத்தை சொல்லியிருப்பதாலும் ப்ரபஞ்சம் மித்யையாகிறது. இது போல

'नेहास्ति द्वैतसिद्धिः' (नृ. ता. उप.) 'अथात आदेशो नेति नेति' (बृह. उ. ४-३-६)

முதலிய நிஷேத சப்தங்களாலும் மித்யை என்றறிய வேண்டும்.

மேலும், சிப்பி வெள்ளியல்ல. வெள்ளிபோலத் தோன்றுகிறது என்று மித்யையான வெள்ளியை வ்யவஹாரம் செய்கிறோம்.

'शुक्तिका हि रजतवदवभासते, न पुनरिदं रजतम्'

இந்த வாக்யத்தில் **इव** என்ற சப்தம் மித்யை என்பதை போதிக்கிறது. அதுபோல 'यत्र हि द्वैतमिव भवति' (बृह. उ. ६-५-१५) என்ற வேதத்தில் इव சப்தம் த்வைதம் மித்யை என்பதை போதிக்கிறது. **वाचारम्भणं** முதலிய பல்வேறு வேத சப்த ப்ரமாணத்தால் ப்ரபஞ்சம் மித்யை என்று தெரியவந்தது.

மேலும், ஒருவித விகாரமுமில்லாதது ப்ரும்ஹம் என்று சொல்லி அது பலவித விகாரமாக மாறியது என்று வேதம் கூறுகிறது. மண், குடமாக பரிணா



மத்தை அடைந்தால் உருண்டையான அவஸ்தை மண்ணில் போய்விடும். ஒருவிதமான விகாரத்தையும் அடையாமல் மண் குடமாக முடியாது. எப்பொழுதும் விகாரத்தையடையாத ப்ரம்ஹம் உலகமாக மாறியது என்ருல் மண் குடமாவதுபோல என்று கொள்ளமுடியாது. சிப்பி வெள்ளியாகத் தெரிந்தபொழுதும், வெள்ளியல்லவென்று அறிந்த சமயத்திலும் ஒரேமாதிரியாயிருக்கிறது. தன் ஸ்வரூபத்திலிருந்து நழுவாமல் சுக்தி வெள்ளியாவதுபோல், ப்ரம்ஹம் தன் ஸ்வரூபத்தை நழுவவிடாமல் ப்ரபஞ்சமாஞல் ப்ரபஞ்சம் சுக்தியில் தோன்றிய வெள்ளிபோல மித்யையாக இருக்கவேண்டும். விகாரமற்ற ப்ரம்ஹம் உலகமானது என்பதிலிருந்து ப்ரம்ஹத்தின் விவர்த்தமுலகம் மித்யை என்று அறிகிறோம். ஆகவே அர்த்தாபத்தி ப்ரமாணம் கூறப்படுகிறது. இந்த விபரம்,

'स्थितिगतिवत्स्यादिति चेन्न, कूटस्थस्येति विशेषणात्'
(N. S. ब्र. सू. भा. पृ. ४६१)

என்ற பாஷ்யத்தால் தெரியவருகிறது. உலகம் ப்ரம்ஹத்தின் விவர்தமே என்று விவர்தவாதத்தை (மாயாவாதத்தை),

'आत्मनि चैवं विचित्राश्च हि' (ब्र. सू. २-१-२८)

என்னும் ஸூத்ரத்தில் ஸ்பஷ்டமாக பாதராயண மஹரிஷி கூறுகிருர். ப்ரம்ஹம் அவயவங்களுடையது என்று ஒத்துக்கொண்டால் நிரவயவம் ப்ரம்ஹம்

என்ற ச்ருதி வாக்யங்களின் விரோதம் வரும், நிரவயவமானல் (அவயவங்களற்றதானல்) அது உலகமாக ஆனல் முழுவதும் உலகமானபடியால் உலகத்தைத் தவிற வேறு தெரிந்துகொள்ள வேண்டிய பரம்ஹம் இல்லையென்று நேரிடும் என்னும் ஆக்ஷேபத்திற்கு

'श्रुतेस्तु शब्दमूलत्वात्' (ब्र. सू. २-१-२७) 'आत्मनि चैवं विचित्राश्च हि' (ब्र. सू. २-१-२८)

என்ற இரண்டு ஸூத்ரங்களால் உலகம் ப்ரம்ஹத்தின் விவர்தம், பரிணமமல்ல. ப்ரம்ஹத்தின் ஸ்வரூபத்தில் ஒருவித மாறுதலுமில்லாமலே உலகஸ்ருஷ்டியாகலாம். ஸ்வப்நத்தைப் பார்க்கும் ஆத்மா தன் ஸ்வரூபத்தில் மாறுதலை கொஞ்சம் கூட அடையாமலேயே விசித்ரமான பல பதார்த்தங்களை ஸ்ருஷ்டிப்பதாக வேதம் கூறுகிறது. அதுபோல பரம்ஹம் தன் ஸ்வரூபத்தில் மாறுதல் இல்லாமல் உலகமாக ஆகிறது என்று ஸமாதானம் கூறப்பட்டிருக்கிறது.[1]

---

1. "अपि च नैवात्र विवदितव्यं, कथमेकस्मिन् ब्रह्मणि स्वरूपानुपमर्देनैवानेकाकारा सृष्टिः स्यादिति। यतः आत्मन्यपि एकस्मिन् स्वप्नदृशि स्वरूपानुपमर्देनैवानेकाकारा सृष्टिः पठ्यते 'न तत्र रथा न रथयोगा न पन्थानो भवन्ति, अथ रथान् रथयोगान् पथः सृजते" इत्यादिना। 'लोकेऽपि देवादिषु मायाव्यादिषु च स्वरूपानुपमर्देनैव विचित्राः हस्त्यश्वादिसृष्टयो दृश्यन्ते। तथै-कस्मिन्नपि ब्रह्मणि स्वरूपानुपमर्देनैव अनेकाकारा सृष्टिर्भविष्यतीति" (N S. ब्र. सू. भा. पृ. 477) इति भाष्यम्। "अनेन स्फुटितो मायावादः। स्वप्नदृगात्मा हि मनसैव स्वरूपानुपमर्देन रथादीन् सृजति" इति भामती॥



மேலும் ஆரம்பணதிகரணத்தில்

'यथा च मृगतृष्णिकोदकादीनामूषरादिभ्योऽनन्यत्वं दृष्टनष्टस्वरूपत्वात् स्वरूपेणानुपाख्यत्वात्, एवमस्य भोग्य-भोक्त्रादिप्रपञ्चजातस्य ब्रह्मव्यतिरेकेणाभाव इति द्रष्टव्यम्'

என்ற பாஷ்யத்தில் 'दृष्टनष्टस्वरूपत्वात्' என்ற பதத்தால் மித்யை என்பதில் யுக்தி (அனுமானம்) கூறப்பட்டிருக்கிறது.

சில ஸமயத்தில் தோன்றி மற்றொரு ஸமயத்தில் தோற்றமளிக்காத கானல் நீர் முதலியவைகள் உண்மைப்பொருளல்ல. குடம் முதலிய விகாரங்களும் சில ஸமயத்தில் தோன்றுகின்றன. உண்டாவதற்கு முன்பும் நாசமடைந்த பிறகும் தோன்றுவதில்லை. ஆகையால் அவைகள் பரமார்த்த ஸத்ருபமல்ல. ஸத்தாயிருப்பது எப்பொழுதும் ஸத்தாகவேயிருக்கும். மற்றொரு ஸமயத்தில் அஸத்தாயிருக்கமுடியாது. ரூபம் எப்பொழுதும் ரூபஸ்வபாவமாகவேயிருக்கும். அதற்கு விபரீதமான ரஸ ஸ்வபாவமாயிருக்காது. அதுபோல ஸத்

ஸ்வபாவமுள்ளது அஸத்ஸ்வபாவமாயிருக்காது.
குடத்தில் ஸத்வம் என்ற தர்மம் சில சமயம்
உண்டாகிறது. சில சமயம் அஸத்வம் என்ற தர்ம
முண்டாகிறது என்று ஒத்துக்கொண்டால் ஸத்வம்,
அஸத்வமிரண்டுமுண்டாகும் காலத்தில் ஆதார
மான குடமிருந்துகொண்டேயிருக்கும். ஆகவே
குடம் நித்யமாகிவிடும், விகாரம் என்று சொல்ல
முடியாது. அஸத்வமுண்டாகும் பொழுது குடமில்லை
யென்றால் அஸத்வம் குடத்தின் தர்மம் என்று
சொல்லுவது பொருந்தாது. தர்மீ இல்லாமல் தர்ம
மிருக்கமுடியாது. ஆகவே சில சமயம் தோன்றி
சில சமயம் தோன்றாதபடியால் உலகம் (விகாரம்)
பரமார்த்த ஸத் அல்லவென்று அந்த பாஷ்யத்தின்
கருத்து. 'दृष्टनष्टस्वरूपत्वात्' என்ற பதத்தில் नष्ट
என்னும் பதம் दृष्ट என்ற பதத்தின் எதிரிடை
யான अदृष्ट என்ற பொருளுடையது. नश अदर्शने
என்று தாதுபாடமிருப்பதால் नष्ट என்றப்தம் பார்க்
கப்படாதது என்ற அர்த்தத்தை போதிக்கிறது.

மேலும் இது குடம் என்ற ஞானத்தில் குடம்
தோன்றுகிறது. ஞானம் 'த்ருக்' என்றும், குடம்
'த்ருச்யம்' என்றும் சொல்லப்படுகிறது. த்ருக்குக்
கும் த்ருச்யமான குடத்திற்கும் ஸம்பந்தம் என்ன
வென்று சிந்திப்போம். ஞானம் விஷயி, குடம்
விஷயம். ஆகவே விஷய விஷயி பாவம் ஸம்பந்தம்
'விஷயதா' என்று சொல்லப்படும். அது



ஞானத்தைக்காட்டிலும் வேறானது என்று சொல்லு
கிறார்கள். பூமிக்கும் அதிலிருக்கும் குடத்திற்கும்
ஸம்யோகம் ஸம்பந்தம். அந்த ஸம்யோகம் பூமி
யோடும் குடத்தோடும் ஸமவாயம் என்ற ஸம்பந்
தத்தால் ஸம்பந்தப்பட்டதே. குடத்தோடும் பூமி
யோடும் ஸம்பந்தப்படாத ஸம்யோகம் குடத்திற்கும்
பூமிக்கும் ஸம்பந்தமாகாது. அதுபோல ஞானத்
திற்கும் குடத்திற்கும் விஷயதா என்கிற ஸம்பந்த
மும் ஞானத்தோடு ஸம்பந்தப்பட்டதாயிருக்க
வேண்டும். அதே விஷயதா, விஷயதா ஸம்பந்தத்
துக்கும் ஞானத்துக்கும் ஸம்பந்தமாகாது. தானே
தனக்கு ஸம்பந்தமாகாது. (स्वं न स्वीयम्) தான்
தன்னுடையதாக ஆகாது என்ற அனுபவமிருக்
கிறது. ஆகவே விஷயதா ஸம்பந்தத்திற்கும்
ஞானத்திற்கும் வேறு விஷயதாஸம்பந்தம் என்று
கொள்ளவேண்டும். மறுபடியும் அந்த ஸம்பந்தத்
திற்கும் ஞானத்திற்கும் வேறு ஸம்பந்தம் கொள்ள
வேண்டும். ஆகவே அனவஸ்தா என்ற தோஷம்
வருகிறது. ஆகையால் த்ருக்கின் ஸம்பந்தம் நிர்
வசனம் செய்யமுடியாத மாயிகமான அநிர்வசனீய
மானதால் அந்த ஸம்பந்தத்தால் த்ருக்கோடு
ஸம்பந்தப்பட்ட த்ருச்யமான குடம் முதலியவை
களும் அநிர்வசநீயமான மித்யை.

'अनवस्थादयो दोषाः सत्तां निघ्नन्ति वस्तुनः ।
अद्वैतिनां ते सुहृदः प्रपञ्चे तत्प्रसञ्जकाः ॥'

என்று ஸ்ரீ ஹர்ஷமிச்ரர் கூறுகிறார்.

இந்த யுக்தி **भावे चोपलब्धेः**' (ब्र. सू. (२-१-१५) என்னும் ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. எல்லா பதார்த்தத்திலும் உபலப்தியிருப்பதால் ப்ரம்ஹபிந்நமானது மித்யை என்று அந்த ஸூத்ரத்தின் தாத்பர்யம். இந்த ஸூத்ரார்த்தத்தைத்தான் பின்வந்த ஆசார்யர்கள் [1]'**ब्रह्मान्यत् मिथ्या, दृश्यत्वात्**' என்ற அனுமானம், மித்யை என்பதில் ப்ரமாணம் என்று கூறுகிறார்கள்.

[2]'**भावाच्चोपलब्धेः**' என்று வேறு பாடமும் பாஷ்யத்தில் கூறப்பட்டிருக்கிறது. இந்த ஸூத்ரத்தால் ப்ரபஞ்சம் மித்யை என்பதில் ப்ரத்யக்ஷம் ப்ரமாணம் என்று கூறப்படுகிறது.

## 'प्रतिपन्नोपाधौ त्रैकालिकनिषेधप्रतियोगित्वं मिथ्यात्वम्'

---

1. 'ब्रह्मान्यत् मिथ्या दृश्यत्वात् इत्यनुमानं मानमित्याशयेनाह — भावे चोपलब्धेरिति । ब्रह्मान्यस्मिन् भावे वस्तुमात्र एव उपलब्धेः दृश्यत्वात्' ( वे. सू. मु. पृ. 80 ) इति वेदान्तसूत्रमुक्तावलिः ॥

2. 'भावाच्चोपलब्धेः' इति पाठे उपलब्धेः मिथ्यात्वांशे प्रत्यक्षस्य सत्त्वादित्यर्थः । तेन प्रत्यक्षं प्रमाणमुपन्यस्तम् । घटोऽस्तीत्यादौ अस्तित्वशब्दितब्रह्मसत्तायां प्रतिपन्नस्य घटादे घटो नास्तीति प्रत्यक्षेण तस्यामेवाभावावगाहनमिति विवरणोक्तेः । (वे. सू. मु. पृ. 80) इति वेदान्तसूत्रमुक्तावलिः ॥



சுக்தியைப் பார்த்து வெள்ளியென்ற ப்ரமம் உண்டாகிறது. அதில் தோன்றும் வெள்ளி மித்யை, வெள்ளியாகத் தோன்றும் சுக்தியில் வெள்ளியில்லை யென்று தத்வஞானத்தில் புலப்படுகிறது. **इदं रजतम्** என்று வெள்ளியிருப்பதாக அறியப்பட்ட சுக்தியில் **नाद रजतम्** வெள்ளியில்லை, அது சுக்தியென்ற ப்ரத்யக்ஷமானது வெள்ளி மித்யை என்பதற்கு ப்ரமாணம். வெள்ளிக்கு ஆதாரமாகத் தோன்றிய சுக்தியில் வெள்ளியின் அபாவமே மித்யை என்பதின் பொருள். ப்ரம்ஹம் ஸத்ரூபமானது. அது **अस्ति** என்ற பதத்தின் பொருள். **घटोऽस्ति** என்ற ப்ரத்யக்ஷம் அஸ்தியின் பொருளான ஸத்தாரூபமான ப்ரம்ஹத்தில் குடத்தின் ஸம்பந்தத்தைத் தோற்றுவிக்கிறது. மறுபடியும் '**घटो नास्ति**' என்ற ப்ரத்யக்ஷம் ஸத்தாரூபமான ப்ரம்ஹத்தில் குடத்தின் அபாவத்தை தோற்றுவிக்கிறது. ஆகவே குடமிருந்ததாக தெரிந்த ஸத்தையில் குடத்தின் அபாவம் ப்ரத்யக்ஷமாகத் தோன்றுவதால் ப்ரத்யக்ஷமே குடம் முதலிய ப்ரபஞ்சம் மித்யையென்பதற்கு ப்ரமாணமாகிறது.

**घटः सन्** குடம் ஸத்தாயிருக்கிறதென்ற ப்ரத்யக்ஷமுண்டாகிறது. அதனால் ப்ரபஞ்சம் ஸத்யமென்று ஸித்திப்பதால் மித்யையென்பது சரியல்ல என்ற ஒரு ஆக்ஷேபம் வருகிறது. அதன் ஸமாதானம் பின்வருமாறு.

பிரபஞ்சம் அத்வைத ப்ரம்ஹ ஸாக்ஷாத்காரத்தால் பாதிக்கப்படுகிறது. அதற்கு முன்காலத்தில்

(வ்யவஹார காலத்தில்) பாதிக்கப்படுவதில்லை. வருங்காலமுள்பட மூன்று காலங்களிலும் பாதிக்கப் படாமலிருக்கிறது என்னும் பரமார்த்த ஸத்யம் என்ற ப்ரத்யக்ஷமே ப்ரபஞ்சம் மித்யை என்பதற்கு பாதகமாகும், ப்ரத்யக்ஷ ப்ரமாணம் மூன்று காலங் களிலும் பாதகமில்லாத தன்மையை புலப்படுத்த முடியாது. ஆகையால் அந்த ப்ரத்யக்ஷம் பாதக மாகாது.

சுக்தியை வெள்ளியென்று நினைக்கிறோம். சுக்தி அதிஷ்டாநம் என்றும், ரஜதம் ஆரோப்யம் என்றும் கூறப்படுகிறது. சுக்தி வெள்ளியாக அறியப்படுவ தால் அவ்விரண்டிற்கும் தாதாத்ம்யம் ஸம்பந்தம். வெள்ளியும், ஸம்பந்தமும் அநிர்வசநீயம் மாயிகம். (மித்யை) ஸத்ரூபமான ஒரே ப்ரம்ஹத்தில் குடம் முதலிய எல்லா ப்ரபஞ்சமும் ஆரோபிக்கப்பட்டிருக் கிறது. ப்ரம்ஹம் அதிஷ்டானம். குடம் முதலியவை ஆரோப்யம். இரண்டிற்கும் தாதாத்ம்யம் அநிர்வசநீயமான ஸம்பந்தம். '**घटः सन् पटः सन्**' என்ற ப்ரத்யக்ஷம் குடம் முதலிய ப்ரபஞ்சத்தில் அதிஷ்டானமான ஒரே ஸத்ரூபத்தின் தாதாத்ம்யம் என்ற ஸம்பந்தத்தை புலப்படுத்துகிறது. ஆகையால் ஒரேமாதிரியாக ஞானம் (**अनुगतप्रतीतिः**) உண்டாகிறது. இதை '**अधिष्ठानानुवेधः**' என்று சாஸ்திரங்களில் சொல்லுகிறார்கள். ஆகவே **घटः सन्** என்ற ப்ரத்யக்ஷம் குடத்தில் ஸத்தை-ஸத்யத் தன்மை இருப்பதாக தோற்றுவிக்கவில்லை. அதிஷ்



டானமாகிய ஸத்ரூப ப்ரம்ஹத்தினுடைய தாதாத்ம் யத்தையே தோற்றுவிக்கிறது. அது மித்யை என்பதற்கு ஸாதகமாகவேயிருக்கிறது. [1] இந்த விபரம் '**सत्त्वाच्चावरस्य**' (ब्र. सू. २-१-१६) என்ற ஸூத்ரத்தில் கூறப்பட்டிருக்கிறது.

சாஸ்திரங்களில் முயல் கொம்பு '**शशशृङ्गम्**' முதலியவைகளை 'அஸத்' என்றும் '**निरुपाख्यं**' என்றும் கூறுகிறார்கள். அவைகளுக்கு ஸ்வரூபமே கிடையாது **निःस्वरूपं** என்று கூறுவார்கள். அது பர மார்த்த ஸத்யமல்ல. சுக்தியில் தோன்றும் வெள்ளி (**शुक्तिरूप्यं**) அஸத்தல்ல. மித்யை எனப் படும். அதுவும் பரமார்த்த ஸத்யமல்ல. ஆனால் அதற்கு அவித்யையின் பரிணாமமான மாயிகமான ஸ்வரூபமுண்டு. தத்வ ஞானத்தால் பாதிக்கப் படுகிறது. ஆகவே அது ஸத்துமல்ல. அஸத்து மல்ல. **सदसद्विलक्षणम्।** இதுதான் மித்யை என்ற

---

1. 'न च घटस्सन्नित्यादिप्रत्यक्षेण सत्यत्वमपि सिध्यतीति वाच्यम् । त्रिकालाबाध्यत्वादिसत्यत्वस्यायोग्यत्वेन अधिष्ठानब्रह्मसत्ताया आध्यासिकसम्बन्धस्यैव तद्विषयत्वात् । अत एव तादृशप्रत्यक्षादिबलादपि प्रपञ्चस्य मिथ्यात्वं सिध्यतीत्याह — सत्त्वाच्चावरस्येति । अवरस्य—कल्पितत्वेन स्वतः सत्ताहीनस्य प्रपञ्चस्य अधिष्ठानसत्तामादायैव सत्तानुभवात् । (वे. सू. मु. पृ. 82) इति वेदान्तसूत्रमुक्तावलिः ॥

பதத்தின் பொருள். வேதாந்திகள் சொல்லும் மித்யை என்ற பதத்திற்கு 'அஸத்' என்றுதான் பொருள் என்று வைத்துக்கொண்டே பிறமதத்தார்கள் தூஷணங்கள் கூறுகிறார்கள். அதுசரியல்லவென்பதை விளக்குவதற்காகவே ஆரம்பணாதிகரணத்தில் ப்ரம்ஹ ஸூத்ரத்திலேயே, மித்யை என்பதற்கும், அஸத் என்பதற்கும் வேற்றுமையை பாதராயண மஹரிஷி நிரூபணம் செய்திருக்கிறார்.

[1] சாந்தோக்யத்தில் ப்ரளயத்தில் ப்ரபஞ்சம் அஸத்தாயிருந்தது என்று கூறப்பட்டிருக்கிறது. 'असदेवेदमग्र आसीत्' (छा. ३-१९-१) மித்யை என்பது நிஸ்வரூபமான அஸத்தல்ல. ஆகவே ப்ரபஞ்சம் அஸத்தாகச்சொல்லியிருப்பதால் மித்யையாக இருக்கமுடியாது என்ற ஆக்ஷேபம் செய்துகொண்டு, அதற்கு பதில் பின்வருமாறு நிரூபணம் செய்கிறார். 'तत्सदासीत्' என்று அடுத்த வாக்யமிருப்பதால் அங்கு 'असत्' என்பதற்கு ஸ்வரூபமற்ற அஸத் என்று பொருளில்லை. நாமரூபங்களோடு ஸ்பஷ்டமாக அறியப்படுவதை 'ஸத்' என்று சொல்லுவது

1. 'असद्व्यपदेशान्नेति चेन्न धर्मान्तरेण वाक्यशेषात्' (ब्र. सू. २-१-१७) 'असदेवेदमग्र आसीत्' इत्यादिना प्रपञ्चस्यासत्त्वोक्तेः असदन्यत्वव्याप्यं मिथ्यात्वं न स्यादिति चेन्न। तत्रानभिव्यक्तिरूपेण धर्मान्तरेणैवासच्छब्दोक्तिः, न तु निरुपाख्यत्वेन, 'तत्सदासीत्' इति वाक्यशेषात्' (वे. सू. मु. पृ. 82) इति वेदान्तसूत्रमुक्तावलिः ॥



போல ப்ரளயத்தில் நாமரூபங்களில்லாதபடியால் ஸ்பஷ்டமாக அறியப்படாமையால் 'அஸத்' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

மேலும் ஸ்வரூபமில்லாத அஸத் (முயல் கொம்பு முதலியவை) ஒரு கார்யத்தையும் உண்டாக்காது. ஆகாசம் முதலிய ப்ரபஞ்சம் பல கார்யங்களை உண்டுபண்ணுகிறது. ஆகவே அஸத்தல்ல. வேதத்தில் ப்ரளயத்தில், உலகம் ஸத்தாகவும் அஸத்தாகவுமில்லாத तमः என்ற பதத்தால் சொல்லப்படும் மாயா ரூபமாக இருந்தது என்று கூறப்பட்டிருக்கிறது.

'नासदासीन्नो सदासीत्तम आसीत्' इति।

ஆகையால் ஸதஸத் விலக்ஷணமான மித்யையானது உலகம். வஸ்திரம் பிரித்திருந்தால் உடலை மூடும் கார்யத்தைச் செய்கிறது. சுருங்கி மடித்திருக்கும்போது உடலை மூடுவதில்லை. ப்ராணன் முதலிய வாயுக்கள் ப்ராணாயாமத்தால் அடங்கி ஸூக்ஷ்மமாயிருக்கும் ஸமயத்தில் அவைகளின் கார்யத்தை செய்வதில்லை. அதுபோலவே ப்ரளய காலத்தில் உலகம் காரணமான மாயையில் ஸூக்ஷ்மமாக சுருங்கியிருப்பதால் கார்யங்களை உண்டுபண்ணுவதில்லை. ஆகவே உலகம் அஸத்தல்ல. மித்யை என்று கொள்ளவேண்டுமென்றும்,

[1]'युक्तेः शब्दान्तराच्च' (ब्र. सू. २-१-१८) 'पटवच्च' (२-१-१९) 'यथा च प्राणादि' (२-१-२०)

என்ற ஸூத்ரங்களால் நிரூபணஂ செய்யப்பட்டிருக்கிறது.

உலகத்திற்கு ப்ரம்ஹம் உபாதான காரணம், அதுபோல மாயையும் உபாதான காரணம் என்று ஸூத்ரக்காரர் கூறுகிறுர். ச்வேதாச்வதரோபநிஷத்தில் **'यो योनिं योनिमधितिष्ठत्येकः'** என்று **योनि** சப்தத்தால் மாயை சொல்லப்படுகிறது. அதுவும் உலகத்திற்கு **प्रकृति** உபாதான காரணம் என்று **'मायां तु प्रकृतिं विद्यात्'** என்னும் ச்ருதி கூறுகிறது. ஆகவே ப்ரம்ஹம் விவர்தோபாதானம், மாயை பரிணாமியுபாதானம் என்று ஸித்திக்கிறது. **सन् घटः** என்று ப்ரம்ஹஸத்தை உலகத்தில் தோன்றுவதுபோல

---

[1] **युक्तेः 'शब्दान्तराच्चेति।** युक्तेः—असत्त्वे **अर्थक्रियाकारि**त्वानुपपत्तेः। शब्दान्तरात्—'नासदासीन्नो सदासीत् तमआसीत्' इति सदसद्विलक्षणमायारूपेण प्रागवस्थितप्रपञ्चबोधकात्। **पटवच्चेति**। मायारूपेण प्रपञ्चस्य प्राक् स्थितावपि न तदानीमर्थक्रियाकारित्वम्, यथा संकुचितस्य पटस्य न प्रावरणादिकार्यकारित्वम्। **यथा प्राणादीति**। यथा निरोधेन सूक्ष्मतापन्नेभ्यः प्राणादिभ्यो नार्थक्रिया, एवं कारणात्मतामापन्नात् सूक्ष्मप्रपञ्चात्' (वे. सू. मु. पृ. 82-8[illegible]) इति वेदान्तसूत्रमुक्तावलिः॥



**जडो घटः** என்று மாயையின் ஜடத்தன்மையும் தோன்றுவது பொருத்தமானது. **'योनिश्च हि गीयते'** ब्र. सू. (१-४-२७) என்ற ஸூத்ரத்தில் **'प्रकृतिश्च'** என்ற ஸூத்ரத்திலிருந்து **प्रकृतिः** என்ற பதத்தைச் சேர்த்து **योनि** சப்தத்தால் சொல்லிய மாயையும் பிரகிருதியாக வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது என்பது ஸூத்ரத்தின் அர்த்தம் என்று ஸ்ரீ அப்பய தீக்ஷிதரவர்கள் வ்யாக்யானம் செய்திருக்கிறுர்கள்.[1]

1. கானலே ஜலமென்று நினைக்கிறேம். அங்கு அஸத்யமான கானல்நீர் (**मृगतृष्णिकाजलं**) ஸ்நாநத்திற்கோ பானத்திற்கோ உபயோகப்படுவதில்லை. ஆகவே உலகம் அஸத்யமானுல் கார்யங்களை உண்டுபண்ண முடியாது.

2. புகையைக்கொண்டு நெருப்பு இருப்பதாக ஸித்திக்கிறது. சிலசமயம் மண் துளிகள் புகையாகப் புலப்படுகின்றன. அதனுல் நெருப்பு இருப்பதாக ஸித்திப்பதில்லை. ஆகவே அஸத்யத்தால் ஸத்யவஸ்துவின் ஸித்தி ஏற்படுவதில்லை.

---

1. प्रकृतिश्चेति सूत्रात् प्रकृतिपदं मण्डूकप्लुत्याऽनुवर्तते, तत्रायमर्थः; न केवलं ब्रह्मैव जगदुपादानम्, किन्तु 'यो योनिं योनिमधितिष्ठत्येकः' इत्यादिश्रुतिषु योनिशब्देनोक्ता मायाप्युपादानमित्याम्नायते 'मायां तु प्रकृतिं विद्यात्' इत्यादिश्रुतिषु (न्या-र-पृ. 866) इति न्यायरक्षामणिः॥

உலகம் முழுவதும் மித்யையானல் வேதமும் மித்யை என்று கொள்ளவேண்டும். அதனுல் வேதத்தால் பரமார்த்த ஸத்யமான ப்ரம்ஹம் எப்படி ஸித்திக்கமுடியும் என்று இரண்டு ஸந்தேஹங்கள் உண்டாகின்றன.

அவைகளின் ஸமாதானம் பின்வருமாறு:—

1. அதிகமான வெளிச்சமில்லாமல் கொஞ்சம் இருட்டு இருக்குமிடத்தில் பெரிய வளைந்த கயிற்றைப் பார்த்து பயங்கரமான பாம்பு என்ற தோற்றத்தால் பயம் ஏற்பட்டு சிலர் மரணத்தையும் அடைகிருர்கள். இவ்விதம் மரணத்தை உண்டாக்கிய ஸத்யமான பயத்தை உண்டாக்கியது கயிற்றில் ஆரோபணம் செய்யப்பட்ட அஸத்யமான பாம்புதான். பாம்பு அஸத்யமாயினும் அதன் ஞானம் ஸத்யமானது. அதுதான் பயத்தைக் கொடுக்கிறது. அஸத்யம் ஸத்யத்தை உண்டு பண்ணவில்லை என்று சொல்லுவது பொருந்தாது. பொதுவாக ஞானம் என்ற முறையில் பாம்பின் ஞானம் பயத்தைக்கொடுக்கவில்லை. குடத்தின் ஞானத்தால் பயமேற்படவில்லை. அங்கு தோன்றின பாம்பின் ஞானமென்ற முறையில் தான் பயத்தை உண்டுபண்ணுகிறது. ஆகவே ஞானத்தில் விசேஷணமாகத் தோன்றும் பாம்பும் பயகாரணமே. மேலும் ஞானம் ஸ்வபாவத்தில் ஸத்யமானுலும் ஆரோபணம் செய்யப்பட்ட



பாம்பின் ஞானமென்ற முறையில் அஸத்யம் தான். அந்த முறையில் தான் பயத்திற்கு காரணமாகிறது. ஆகவே பயகாரணமான ஸர்பஞானம் அஸத்யமே. இந்த விபரத்தை [1] खण्डन க்ரந்தத்தில் ஸ்ரீ ஹர்ஷமிச்ரர் ஞானஸ்வரூபம் ஸத் என்பது திருடர்களால் கொள்ளையடித்தபின் வீட்டில் ராத்ரி பாராக்காரர்கள் விழித்துக்கொண்டு ஜாக்ரதையாயிருப்பதைப் போலிருக்கிறது என்று கூறுகிறுர்.

[2] விசாரித்துப்பார்த்தால் ஸர்ப ஞானத்தின் ஸ்வரூபமே அஸத்யமானது. தோன்றிய பாம்பு போல அதன் ஞானமும் அவித்யா பரிணுமமே. இரண்டிற்கும் தோஷம், அவித்யா இவைகளே ஸாமக்ரீயாகும். தத்வமறிந்த பிறகு ஸர்பமென்று வந்த ஞானம் மித்யை என்று அனுபவம் ஏற்படுகிறது.

**( अयं सर्पः इति यज्ज्ञानं जातं तन्मिथ्या )**

---

1. 'अन्यदा सत्त्वं तु पाटच्चरलुण्ठितवेश्मनि यामिकजागरणवृत्तान्तमनुसरति' इति खण्डनग्रन्थः ॥

2. 'स्वरूपेणापि तु भ्रमज्ञानस्य मिथ्यात्वमस्त्येव, स्वरूपतो बाधाभावे विषयतोऽप्यबाधप्रसङ्गात् । ... विषय इव मिथ्यात्वप्रयोजकदोषादिसमवहितसामग्र्या ज्ञानेऽप्यविशेषाच्च' ॥ N. S. ( अ. सि. 446) इति अद्वैतसिद्धिः ॥

ஞானஸ்வரூபம் மித்யையாகாமல் அதன்
விஷயம் மித்யையாக இருக்கமுடியாது. 'ஆகவே
ஸர்பம் என்ற விஷய விசேஷணமில்லாமலே ஞான
ஸ்வரூபம் அஸத்யமானதால் அஸத்யம் ஸத்யமான
மரணத்தையுண்டுபண்ணும் பயத்தை உண்டாக்கி
யது என்பதில் ஸந்தேஹமில்லை.

2. அஸத்யமான வேதத்திலிருந்து ஸத்யமான
ப்ரம்ஹத்தின் ஞானம்'உண்டாகலாம். புஸ்தகத்தை
பார்த்து உண்மையான அர்த்தத்தின் ஞான
முண்டாகிறது. நாம் பார்ப்பது கோடுகளே.
அவைகள் வர்ணங்களல்ல. அவை காதால்
கேட்கப்படவேண்டியவை. ஆனுல் குழந்தைப்
பருவம் முதல் கோடுகளை இது 'ககாரம்' என்று
சொல்லிக்கொடுத்தபடி மனதில் படிந்திருப்பதால்
விவேகம் வந்தபிறகும் கோடுகளால் வர்ணங்கள்
நினைக்கப்பட்டாலும் கோடுகளாகவே (रेखातादात्म्येन)
நினைக்கப்படுகின்றன. பெரியோர்களும் சிறியோர்
களைப்போலவே ககாரத்தை எழுதுகிறுன், படிக்
கிறுன் என்றுதான் சொல்லுகிறுர்கள். ஆகவே கோடு
களாக ஆரோபிக்கப்பட்ட வர்ணங்கள் (அஸத்
யங்கள்) உண்மையான அர்த்தத்தின் ஞானத்தை
யுண்டுபண்ணுகின்றன.

வர்ணங்கள் நித்யமானவை. அவைகளுக்கு
ஸ்வபாவமாக ஹ்ரஸ்வம், தீர்கம் என்பதில்லை
வர்ணத்தை தெரியப்படுத்தும் த்வனியிலுள்ளவை



களே வர்ணத்தில் ஆரோபணம் செய்யப்படு
கின்றன. "नगः" என்ற பதம் மலை என்னும்
உண்மைப் பொருளைப் போதிக்கிறது. ஹ்ரஸ்வ
மான நகாரமென்பது அஸத்யமே. "नागः"
என்ற பதம் யானை என்னும் ஸத்ய வஸ்துவைப்
போதிக்கிறது. தீர்கத்தோடு கூடிய நகாரம்
அஸத்யமே.

மண் துளிகளை புகையாக நினைத்தால் அஸத்ய
மான புகை ஸத்யமான நெருப்பின் ஞானத்தை
யுண்டுபண்ணுவதில்லை. ஹேதுவில் வ்யாப்தியிருந்
தால் தான் அனுமிதியுண்டாகும். அஸத்யமான
புகையிருக்குமிடத்தில் நெருப்பு இருப்பதில்லை.
ஆகவே வ்யாப்தியில்லாமையே ஸத்யமான நெருப்
பின் ஞானத்தை யுண்டுபண்ணுததின் காரணம்.
அஸத்யத் தன்மையல்ல. ஏனெனில், பல அஸத்ய
மான வஸ்துக்கள் ஸத்ய வஸ்துவின் ஞானத்தை
யுண்டுபண்ணுகின்றன. நம் எதிரிலிருக்கும்
கண்ணுடியில் ஒரு மனிதனின் ப்ரதிபிம்பத்தைப்
பார்க்கிறேரம். அதிலிருந்து பின்னுல் பிம்பமான
உண்மை மனிதன் (ஸத்யம்) இருக்கிறுனென்று
அறிகிறேரம். கண்ணுடியிலிருக்கும் ப்ரதிபிம்பம்
அஸத்யம். அதில் பிம்பத்தின் வ்யாப்தியிருக்
கிறது. பிம்பமில்லாத ஸ்தலத்தில் ப்ரதிபிம்பமிருப்
பதில்லை. ஆகவே வ்யாப்தியிருப்பதுதான் ஸத்ய
வஸ்துவின் அனுமிதியை உண்டுபண்ணுவதற்கு
காரணம். ஸத்யத்தன்மையில்லை.

ஸ்வப்னத்தில் தோன்றும் வண்டி குதிரை முதலியவைகள் எல்லாம் மாயை (மித்யை). உண்மையான வண்டிகள் முதலிய வஸ்துக்களுண்டாக வேண்டிய காரணங்களில்லை. ஆனாலும் ஸ்வப்னத்தில் ஸ்திரீயைப் பார்ப்பதால் கர்ம ஸம்ருத்தியடைந்திருக்கிறதென்று அறிந்துகொள்ளலாமென்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்வப்னத்தைப்பற்றி சொல்லும் சாஸ்திரங்களிலும் ஸூசகங்களுக்கு உண்மையான அர்த்தத்தை போதிக்கும் சக்தியுண்டு என்று,

'मायामात्रं तु कार्त्स्न्येनानभिव्यक्तस्वरूपत्वात्' (ब्र. सू. ३-२-३) 'सूचकश्च हि श्रुतेराचक्षते च तद्विदः' (ब्र. सू. ३-२-४)

என்ற ஸூத்ரங்களால் பாதராயண மஹரிஷி கூறுகிறார். ஆகையால் அஸத்யமான வேதத்தால் பரமார்த்த ஸத்யமான ப்ரம்ஹத்தின் அறிவு உண்டாவதில் ஒருவித ஆக்ஷேபணையுமில்லை.

கர்பத்தில் இருக்கும் வீர்யம் அறிவுள்ளதாய் கை, கால் முதலிய முளைகளோடு முளைத்து க்ரமமாக பால்யம், யௌவனம் முதலிய பல வேஷங்களைப் போட்டுக்கொண்டு இந்திரியங்களால் பார்த்துக்கொண்டும் நடமாடிக்கொண்டுமிருப்பதை



விட வேறு இந்திரஜாலம் வேண்டுமாவென்று பெரியோர்கள் அனுபவித்துக் கூறுகிறார்கள்.[1]

உலகமே ஒரு நீண்ட ஸ்வப்நம். நாம் அவித்யா நித்திரையில் பலவித நீண்ட ஸ்வப்னங்களைக் காண்கிறோம். த்வைத வஸ்துக்களைப் பார்ப்பது முதலியவைகள் 'अहं ब्रह्मास्मि' என்ற ப்ரம்ஹ ஞானம் என்ற விழிப்பு வந்தால் நின்றுவிடும்.

ஆகவே 'उत्तिष्ठत जाग्रत प्राप्य वरान्निबोधत' (का. १-३-१४) அவித்யா நித்ரையைவிட்டு எழுந்திருங்கள், விழித்துக்கொள்ளுங்கள் என்று வேதம் உபதேசிக்கிறது.

## (3) ஜீவஸ்வரூபம்

இதுவரை போக்யமான ப்ரபஞ்சத்தைப்பற்றி சிந்தித்தோம். இனி அதை அனுபவிக்கும் ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை சிந்திப்போம். சேதனனாக நான் என்று அறியப்படும் வஸ்துவை ஜீவாத்மா என்று கூறுகிறோம். நான் மனிதன், அறிந்து

---

1. एतस्मात्किमिवेन्द्रजालमपरं यद्गर्भवासस्थितं
रेतश्चेतति हस्तमस्तकपदप्रोद्भूतनानाङ्कुरम् ।
पर्यायेण शिशुत्वयौवनजरावेषैरनेकैर्वृतं
पश्यत्यत्ति शृणोति जिघ्रति तथा गच्छत्यथागच्छति ॥

கொள்ளுகிறேன் (**अहं मनुष्यः जानामि**) என்றெல்லாம் சரீரத்தை ப்ரத்யக்ஷமாய் அபிமானிக்கிறோம். ஆகையால் சரீரமே ஆத்மா, சேதனன் என்று உலகத்தில் மிகவும் ப்ரசாரமாயுள்ளது. இதுவே லோகாயதமதமெனப்படும். அந்த மதத்தில் ப்ரத்யக்ஷம் ஒன்றே ப்ரமாணம். அனுமானம் சப்தம் முதலிய பரோக்ஷ ப்ரமாணம் ஒத்துக்கொள்ளப் படுவதில்லை. புகையிலிருந்து நெருப்பை தீர்மானமாய் அறியமுடியாது. நெருப்பு இருக்கலாம் என்ற எண்ணத்தால் (**संभावनामात्रात्**) அதை உபயோகப் படுத்தச் செல்லுகிறோம். ப்ருதிவீ, ஜலம், தேஜஸ், வாயு என்று நான்கு பூதங்கள். அவைகள் சரீரமாக உருவத்தை அடைந்தால் அவைகளில் சைதன்யம் உண்டாகிறது. அன்னரஸம் முதலிய பலவித ரஸங்களால் உண்டுபண்ணிய மதுவில் மதத்தை உண்டாக்கும் சக்தியுண்டாகிறது.

இந்த மதத்தை ப்ரம்ஹ ஸூத்ரக்காரர் குணோப ஸம்ஹாரபாதத்தில் நிராகரணம் செய்திருக்கிறார். சரீரத்தின் விசேஷ குணமான ரூபம் முதலிய குணங்கள் சரீரம் இருக்கும்வரையில் இருக்கின்றன. (**यावद्द्रव्यभाविनः**) சரீரத்தில் ப்ராண வியோகமான பிறகு சைதன்யமில்லை. ஆகவே சைதன்யம் சரீரத்தின் குணமில்லை. சரீரத்தில் ப்ராண சம்பந்தமிருக்கும் ஸமயத்திலேயே, ஜாக்ரதவஸ்தையில் **अहं मनुष्यः** என்று சரீரத்தில் நான் என்ற ப்ரத்யக்ஷாபிமானமிருந்தாலும், ஸ்வப்னத்தில் இந்த



சரீரத்தின் தோற்றமில்லாமலே நான் என்ற ப்ரத்யக்ஷானுபவமிருக்கிறது. ஆகவே இங்கு தேஹம் தோன்றாமலே ஆத்மா தோன்றுவதால் தேஹம் ஆத்மாவாகாது. நான் மனிதன் என்ற ப்ரத்யக்ஷம் ப்ரமஞானமே. இந்த தூஷணம்

**'व्यतिरेकस्तद्भावाभावित्वात् न तूपलब्धिवत् ।' (ब्र. सू. ३-३-५४)**

என்ற ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.[1]

அனுமானம் ப்ரமாணமில்லையென்னும் ஞானம் இந்திரிய ஸம்பந்தத்தாலுண்டாகும் ப்ரத்யக்ஷமாகாது. மேலும் ஸந்தேஹமோ அக்ஞானமோ உள்ள மனிதனுக்குத்தான் நாம் சப்தங்களாலறிய வேண்டியவைகளை போதிக்கிறோம். கேட்பவன் அக்ஞானி என்றோ ஸந்தேஹமுள்ளவன் என்றோ ப்ரத்யக்ஷமாக அறிய முடியாது. ஆகவே பரோக்ஷ ப்ரமாணத்தை ஒத்துக்கொள்ளவேண்டும் என்று ஸ்தாபித்த பிறகே கீழே சொல்லிய யுக்தியால் சரீரத்தைக்காட்டிலும் வேறானவன் ஆத்மா என்று

---

1. "प्रत्याह–**व्यतिरेक** इति । न तु-नैवं वाच्यम्, यतः मृतदेहस्योपलब्धिरूपो धर्मस्तथापि नाङ्गीक्रियते इति तत्र तस्याः व्यतिरेकः अभावः सिद्धः, तथा जीवत्यपि देहे आत्मत्वस्य व्यतिरेकः, स्वप्नसुषुप्त्योरात्मनो भावे–भासमानत्वेऽपि, देहस्याभावित्वात् अभासमानत्वात् । एवं चाहं मनुष्यः इत्यादेर्भ्रमत्वमगत्येति भावः ।" (वे. सू. मु. पृ. १८६) इति वेदान्तसूत्रमुक्तावलिः ।

சொல்லவேண்டும். இவ்விதம் சாஸ்திரங்களில் ஸம்பிரதாயமிருக்கிறது. ஜீவாத்மா சரீரமுண்டாகும் ஸமயத்திலுண்டாகிறது. சரீரம் நாசமடையும் பொழுது நாசமடைகிறது என்று சொல்லவேண்டும். ஏனென்றால் தேவதத்தன் பிறந்தான், இறந்தான் என்று உலகம் சொல்லுகிறது. சாஸ்திரத்திலும் பிறந்ததற்காக ஜாதகர்ம முதலிய ஸம்ஸ்காரங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன என்று ஸந்தேஹம் உண்டாகிறது. ஜீவன் சரீரத்தோடு உண்டாகி நாசமடைந்தால் இந்த பிறப்பில் செய்த கர்மாக்களின்பலனை வேறு பிறப்பில் அனுபவிக்கமுடியாமல் போய்விடும். 'न जीवो म्रियते' என்று வேதம் ஜீவன் நாசமடைவதில்லை என்று ஸ்பஷ்டமாக கூறுகிறது. ஜாதகர்ம என்னும் ஸம்ஸ்காரம் ஜீவன் பிறந்த பாபத்தை போக்க விதிக்கப்படவில்லை. கர்பத்தாலும் பீஜத்தாலுமுண்டான பாபத்தை போக்குவதற்காகவே விதிக்கப்பட்டிருக்கிறது.

'एवमेनः शमं याति बीजगर्भसमुद्भवम्' । (मनुः)

ஆகவே ஜீவனுக்கு, புதிய சரீராதிகளோடு ஸம்பந்தத்தால் உண்டாகிறான் என்றும், சரீராதிகளை விடுவதால் மரணமடைகிறான் என்றும் உலக வழக்கு ஏற்படுகிறது. இந்த விபரம்

'स वा अयं पुरुषो जायमानः शरीरमभिसंपद्यमानः, स उत्क्रामन् म्रियमाणः' (बृ. ६-३-८)

என்ற ச்ருதி வாக்யத்தில் காணப்படுகிறது.



சரீரத்தோடு கூட ஜீவன் உத்பத்தியையும், நாசத்தையுமடையாவிட்டாலும் ஆகாசம்போல ப்ரளயம் முடிந்து ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் உண்டாகி ப்ரளய காலத்தில் நாசமடைவான்.

'यथा सुदीप्तात्पावकाद्विस्फुलिङ्गाः सहस्रशः प्रभवन्ते सरूपाः । तथाऽक्षराद्विविधाः सोम्य भावाः प्रजायन्ते तत्र चैवापियन्ति' ॥ (मु. २-१-१)

முண்டகோபநிஷத்தில் நெருப்பிலிருந்து சிறிய நெருப்புத் துளிகள் பல கிளம்பி வருவதுபோல அக்ஷரம் என்ற ப்ரம்ஹத்தினிடமிருந்து பல ஜீவர்கள் சேதனர்கள் உண்டாகிறார்கள். இறுதியில் அக்ஷரத்திலேயே லயத்தை அடைகிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது, என்ற ஆக்ஷேபம் உண்டாகும். அது பொருத்தமற்றது.

ப்ரளயத்திற்குப் பின் உலக ஸ்ருஷ்டியை நிருபணம் செய்யும் பெரும்பாலான உபநிஷதங்களில் ஜீவனுக்கு உத்பத்தி சொல்லப்படவில்லை. மேலும்

'न जायते म्रियते वा विपश्चित्,' (का. १-२-१६) 'अजो नित्यः शाश्वतोऽयं पुराणः,' (का. १-२-१६) 'तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्,' (तै. २-६) 'अयमात्मा ब्रह्म सर्वानुभूः' (बृ. ४-५-१९) ॥

என்ற வேதங்கள் ஜீவனுக்கு உத்பத்தியோ, நாசமோ இல்லை, அவன் நித்யன், ப்ரம்ஹமே

சரீரத்தில் ப்ரவேசித்திருக்கிறது, அவனே ப்ரம்ஹம் என்று கூறுகின்றன. ஆகவே முண்டகோபநிஷத்தில் ஜீவன் உண்டாகிறான், லயத்தை அடைகிறான் என்று சொல்லியிருப்பது ஜீவனுடைய உபாதியின் உத்பத்தியையும், லயத்தையும் கூறுகிறது. ஜீவனுக்கு நாசம் வருமோ என்று மைத்ரேயீயின் ஸந்தேஹத்தை யாக்ஞவல்க்யர்,

"नवा अरेऽहं मोहं ब्रवीमि, अविनाशी वा अरेऽयमात्माऽनुच्छित्तिधर्मा" (बृ. ६-५-१४)

ஜீவாத்மா நாசமடையும் ஸ்வபாவமுள்ளவன் அல்ல, வேறு காரணங்களால் நாசத்தையுமடைய மாட்டான் என்று உபாதியின் உத்பத்தி லயத்தால் உத்பத்தி லயம் சொல்லப்படுகிறது என்று தீர்மானமாகக் கூறியிருக்கிறார். ஆகவே சரீரத்தைவிட வேறான ஜீவன் உத்பத்தி நாசமில்லாத நித்யன் என்று சிந்தித்தோம்.

ஜீவாத்மா ஸ்வப்ரகாசமான சைதன்ய ஸ்வரூபன்.

'अत्रायं पुरुषः स्वयंज्योतिः ।' (बृ. ६-३-९)

என்ற ச்ருதி, ஸ்வப்ன பதார்த்தங்களை ப்ரகாசப்படுத்தும் ஜ்யோதி ஸ்வரூபமாயிருக்கிறான் என்று கூறுகிறது. சித்ரூபமான ஜீவன் ஸுஷுப்தி



காலத்திலிருப்பதால் ஒருவிதமான ஞானமும் இல்லாமலிருப்பது எப்படி பொருந்தும்? ஆகவே ஜீவனில் இந்திரியங்களின் விஷய ஸம்பந்தத்தால் ஞானம் உண்டாகிறது. ஸ்வபாவமாக ஞான ஸ்வரூபனல்ல. அவன் ஞானத்துக்கு ஆதாரம். 'एष हि द्रष्टा' (प्र. ४-९) என்ற ச்ருதி வாக்யமும் அதற்கு ப்ரமாணமென்று ஆக்ஷேபம் உண்டாகிறது. அதன் பரிஹாரம் பின்வருமாறு :—

ஜடமான குடம் முதலியவை சில ஸமயத்தில் ப்ரத்யக்ஷமாயும், சில ஸமயம் பரோக்ஷமாயும் சில ஸமயம் ஸந்தேஹத்துக்குள்ளாகியதாயுமிருக்கிறது. ஜீவாத்மா எப்பொழுதும் ப்ரத்யக்ஷமாகவேயிருக்கிறான். நான் இருக்கிறேனா, இல்லையாவென்று ஸந்தேஹமுண்டாவதில்லை. ஆகவே ஆத்மா ஸ்வப்ரகாசமான சைதன்ய ஸ்வரூபனே. இந்திரியங்களாலுண்டாவது 'வ்ருத்தி' ஞானம். அதற்கு ஆதாரமானதால் 'த்ரஷ்டா' என்று கூறப்படுகிறது.

'न हि द्रष्टुर्दृष्टेर्विपरिलोपो विद्यते' (बृ. ६ ३ २३)

என்ற வாக்கியம் த்ரஷ்டாவின் ஸ்வரூபமான த்ருஷ்டிக்கு நாசமில்லையென்று கூறுகிறது. ஸுஷுப்தி ஸமயத்தில் நித்யமான ஞானஸ்வரூபமிருந்தும் அதனால் பிரகாசிக்க வேண்டிய விஷயங்கள் ஒன்றுமில்லை. ஆகையால் அப்பொழுது வஸ்துக்கள் அறியப்படவில்லை. இந்த விபரம்,

'यद्वै तन्न पश्यति पश्यन्वै तन्न पश्यति, न तु तद्द्रष्टुर्दृष्टेर्विपरिलोपो विद्यतेऽविनाशित्वात्। न तु तद्द्वितीय-मस्ति ततोऽन्यद्विभक्तं यत्पश्येत्' (बृ. ६-३-२३)

என்ற ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. 'अथ यो वेदेदं जिघ्राणीति स आत्मा' (छा. ८-१२-४) என்ற வாக்யம் இந்திரியத்தாலுண்டாகும் விருத்தி ஞானத்தை ப்ரகாசப்படுத்தும் ஸாக்ஷியான ஞான ஸ்வரூபன் ஆத்மாவென்று நிரூபணம் செய்கிறது. ஆகையால் ஞான ஸ்வரூபமான ப்ரம்ஹமாகச் சொல்வது மிகவும் பொருத்தமாகிறது. இது விபரம் 'ज्ञोऽत एव' (ब्र. सू. २-३-१८) என்ற ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ज्ञ என்பதற்கு ஞான ஸ்வரூபன் என்று பொருள்.

(भावार्थे कविधानात् भावार्थकक्रप्रत्ययान्तः ज्ञशब्दः)

ஸாங்க்யர்களும் ஞானஸ்வரூபன் என்ற பொருளில் ज्ञः என்று கூறுகிறார்கள்.

இனி ஜீவாத்மாவின் பரிமாணத்தை சிந்திப்போம். பரிமாணத்தை அணுபரிமாணம், மத்யம பரிமாணம், பரமமஹத்பரிமாணம் என்று மூன்று விதமாக சொல்லுவார்கள். மத்யமபரிமாணமுடைய குடம் முதலியவை உத்பத்தி நாசமுள்ளவைகளாத தால் ஜீவாத்மா மத்யம பரிமாணமுடையவனாயிருந் தால் உத்பத்தி நாசமுடையவனாய் அநித்யனாக நேரிடும். ஆத்மா நித்யன். ஆகவே அணு



வாகவோ பரமமஹத்பரிமாணம் உடையவனாகவோ ஒத்துக்கொள்ளவேண்டும். விபுவாக ஒத்துக் கொண்டால் எங்கும் வ்யாபித்ததால் அசைவு இருக்கமுடியாது. ஆகவே ஜீவன் சரீரத்தைவிட்டு கிளம்புகிறான். வேறு உலகம் போகிறான். அங்கிருந்து திரும்பி வருகிறான் என்பதெல்லாம் பொருந்தாது. ஆகவே அணுவானவன் என்று ஒத்துக்கொள்ளவேண்டும். 'अणुर्ह्येष आत्मा' என்று நேரிடையாகவே வேதம் அணுவென்று கூறுகிறது. அவன் 'हृदि ह्येष आत्मा' (प्र. ३-६) என்ற ச்ருதி ப்ரமாணத்தால் ஹ்ருதயத்திலிருக்கிறான். தீபம் ஓரிடத்தில் இருந்தாலும் அதன் வெளிச்சம் (प्रभा) வியாபித்திருப்பது போல அணுவான ஜீவனின் குணமான சைதன்யம் சரீரம் முழுவதும் வியாபித்திருக்கிறது. ஆகையால் வெய்யிலில் ஜலமடுவில் முழுகினால் உடல் முழுவதும் சீதளானுபவத்தால் ஸுகானுபவம் உண்டாகிறது. வேதங்கள் ப்ரம்ஹத்தையே விபுவாக சொல்லுகின்றன. ஜீவன் அணுவானவனென்று சிலர் கூறுகிறார்கள். பாதராயண மஹரிஷி

'तद्गुणसारत्वात्तु तद्व्यपदेशः प्राज्ञवत्' (ब्र. सू. २-३-२९)

என்ற ஸூத்திரத்தால் அந்த மதத்தை மறுத்திருக்கிறார்.

'तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्' (तै. २-६-१)

ப்ராக்ஞன் என்று சொல்லப்படும் ப்ரம்ஹம்,

உலகத்தை ஸ்ருஷ்டித்து அதனுள்ளே ப்ரவேசித்தது என்றும்,

'अन्तः प्रविष्टः शास्ता जनानाम्'

ஜனங்களுக்குள்ளே ப்ரவேசித்து அவர்களை ஆளுகிறான் என்றும் கூறப்பட்டிருக்கிறது. வ்யாபகமான பரமாத்மா அளவுடைய (परिच्छिन्न) வஸ்துவைப்போல ஒன்றுக்குள்ளே ப்ரவேசிக்கமுடியாது.

'शारीर आत्मा प्राज्ञेनात्मनान्वारूढ उत्सर्जन् याति'(बृ. ६-३-३५)

என்ற ச்ருதி ஜீவன் சப்தம் போட்டுக்கொண்டு சரீரத்திலிருந்து ப்ராக்ஞனோடுகூடவே கிளம்பிப் போகிறான் என்று சொல்லுகிறது. விபுவானால் சரீரத்தைவிட்டு பிரிந்து வெளியே போவதும் முடியாது. ஆகையால் அணுவாயிருக்கவேண்டும். 'स य एषोऽणिमा' (छा. ६-८-७) 'एष म आत्माऽन्तर्हृदयेऽणीयान् व्रीहेर्वा यवाद्वा (छा. ३-१४-३) 'दहरोऽस्मिन्नन्तराकाशः' (छा. ८-१-१) என்னும் ச்ருதிவாக்யங்கள் நேரிடையாகவே ஆத்மாவை அணுவென்று சொல்லியிருக்கின்றன. ஆகவே ப்ராக்ஞனை ப்ரம்ஹமும் அணுவென்று கொள்ளவேண்டிவரும். ப்ரம்ஹத்தையே ஆகாசம்போல் எங்கும் வ்யாபித்தது 'आकाशवत्सर्वगतश्च नित्यः' என்றும், த்யுலோகத்தையும், அந்தரிக்ஷத்தையும் காட்டிலும் பெரியது 'ज्यायान्दिवः ज्यायानन्तरिक्षात्' (छा. ३-१४-३) என்றும்



சொல்லியிருப்பதாலும், எல்லா ப்ரபஞ்சத்திற்கும் உபாதான காரணமென்று சொல்லியிருப்பதாலும், விபுவாகயில்லையென்றால் அவ்விதமுபாதான காரணமாக இருக்க முடியாதபடியாலும், ப்ரும்ஹத்தை விபுவென்றே ஒத்துக்கொள்ளவேண்டும். ஆகவே அணுவென்ற பதத்திற்கு ஸூக்ஷ்மமென்று பொருள். அல்லது இருக்கும் ஸ்தானமான உபாதியை அனுஸரித்து ஔபாதிகமாக அணுபரிமாணமிருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு வீட்டிற்குள் ஆகாசம் ஸ்வபாவமாய் ப்ரவேசிக்கமுடியாதபோனாலும் குடம் ப்ரவேசித்தால் குடத்தினாகாசம் உபாதி வழியாய்ப் ப்ரவேசிப்பதுபோல ப்ரும்ஹம் பரிச்சின்னமான உபாதியைக்கொண்டு ப்ரவேசித்திருக்கிறது என்று ஒத்துக்கொள்ளவேண்டுமென்று மேற்கூறிய மதத்தினர்கள் சொல்லுவார்கள்.

அதுபோல விக்ஞானமயன் என்று சொல்லப்படும் ஜீவன் விபுவென்று

'स वा एष महानज आत्मा योऽयं विज्ञानमयः प्राणेषु'(बृ. ६-४-२२)

என்ற ச்ருதியும், குடத்தை எடுத்துச் சென்றால் குடத்திலிருக்குமாகாசம் போவதுபோல ஜீவன் போகிறான், அவன் ஆகாசத்துக்கு ஸமமானவன் என்று

'घटसंवृतमाकाशं नीयमाने घटे यथा ।
घटो नीयेत नाकाशं तद्वज्जीवो नभोपमः ॥'

என்ற ச்ருதியும் நேரிடையாக ஜீவனை விபுவாக சொல்லியிருப்பதாலும், ஜீவன் அணுவானால் சரீரம்

முழுவதும் வ்யாபித்த சீதளானுபவ ஸுகம் பெற
முடியாதபடியாலும் ஜீவனை விபுவென்றே 'கொள்ள
வேண்டும். ஓரிடத்திலிருக்கும் தீபத்தின் ப்ரபை
வ்யாபித்திருப்பதுபோல ஹ்ருதயத்திலிருக்கும் அணு
வான ஜீவனின் குணமான சைதன்யம் சரீரத்தை
வ்யாபிக்கிறது என்பது பொருத்தமற்றது. ப்ரபை
தீபத்தின் குணமல்ல. அது வேறு ஒரு த்ரவ்யம்.
ஆகவே அந்த உதாஹரணம் சரியல்ல. ஜீவன்
விபுவானபடியால் अणुः என்ற பதத்திற்கு ஸூக்ஷ்ம
மென்று பொருள். அல்லது ஜீவனுக்கு உபாதி
யான புத்தியின் அணுபரிமாணத்தைக்கொண்டு
ஜீவனை அத்யஸ்தமான அணுபரிமாணமுள்ளவன்
என்றும், புத்தியின் உத்க்ராந்தி முதலியவற்றை
வைத்து உத்க்ராந்தி, திரும்பிவருவது முதலியவை
கள் சொல்லப்பட்டனவென்று சொல்லவேண்டும்.

'तमुत्क्रामन्तं प्राणोऽनूत्क्रामति' (बृ. ६-४-२)

என்ற வாக்யம் ப்ராணன் வெளிக்கிளம்புவதற்கு
முன்பே ஜீவன் கிளம்புவதாக சொல்லியிருப்பதால்
ஜீவனுக்கு ஸ்வபாவமாகவே உத்க்ராந்தி சொல்லப்
பட்டிருக்கிறது. மேலும்,

'विद्वान्नामरूपाद्विमुक्तः परात्परं पुरुषमुपैति दिव्यम्' (मु. ३-२-८)

என்ற ச்ருதியில், நாமரூபம் விலகிய பிறகும் उपैति
என்று புருஷனை அடைவதாகச் சொல்லியிருப்பு
தால் ஜீவனுக்கு கமனம் உபாதியைப் பொருத்தல்ல
ஸ்வபாவமானது என்று கொள்ளவேண்டுமென்



ஆக்ஷேபம் வருகிறது. அதன் பரிஹாரம் பின்
வருமாறு :—

புத்தியைக்காட்டிலும் பிராணன் வேருக,

'पञ्चवृत्तिर्मनोवत् व्यपदिश्यते' (ब्र. सू. २-४-१२)

என்ற ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பஞ்ச
வ்ருத்திப் பிராணனுக்கு அநேக வ்ருத்திகள்
விஷயத்தில் உபமானமாக मनः என்ற சப்தத்தின்
பொருளான புத்தியை நிரூபணம் செய்திருப்பதால்
இரண்டும் வேறு என்று தெரியவருகிறது. ப்ராண
னுடைய கார்யங்களும் புத்தியின் கார்யங்களும்
வெவ்வேருயிருப்பதால் இரண்டும் வேருனது என்று
பாஷ்யத்தில் நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது.
ஆகவே, புத்தியை உபாதியாகக்கொண்ட ஜீவன்
முன்பு கிளம்பின பிறகு பிராணன் கிளம்புகிருன்.
ஆகையால் 'तमुत्क्रामन्तं प्राणोऽनूत्क्रामति' என்ற
வாக்யத்தால் ஜீவனுக்கு ஸ்வபாவமான உத்க்ராந்தி
ஸித்திக்காது.

नामरूपाद्विमुक्तः उपैति' என்பது எங்கும் வ்யாபித்த
ப்ரும்ஹம் எப்பொழுதும் அடையப்பட்டதால்
அடைவது என்பது பொருந்தாது. ஆதலால்
குறிப்பிட்ட ப்ரதேசம் என்ற உபாதிகளோடு கூடிய
ப்ரும்ஹத்தை அடைவதாக சொல்லவேண்டுவது
போல, ஜீவனை அணுவென்று சொல்லும் மதக்காரர்
கள், அவர்கள் மதத்தை அனுஸரித்து ப்ராக்ருத

நாமரூபங்கள் போனாலும் அப்ராக்ருத நாமரூபங்கள் என்னும் உபாதியோடுகூட ஜீவன் அடைகிறான் என்று வ்யாக்யானம் செய்யலாம். ஆகவே அதிலிருந்து ஜீவன் புருஷனை அடைவது என்பது ஸ்வபாவமானது என்று ஸித்திக்காது. வாஸ்தவத்தில் ‘**मृत्योर्माऽमृतं गमय**’ (बृ. ३-३-२८) என்ற வாக்யத்திற்கு அமிருதமான ப்ரும்ஹமாக என்னை செய்ய வேண்டுமென்று பொருள் என்று ‘**अमृतं मा कुर्वित्येतदाह**’ (बृ. ३ ३-२८) என்ற ச்ருதி வாக்யமே வ்யாக்யானம் செய்திருப்பதால் ‘**परं पुरुषमुपैति**’ என்பதற்கு பரபுருஷனாக ஆகிறான் என்பதே பொருள். கமனம் அதன் பொருளல்லவென்று முடிவு.

குடத்திலிருக்கும் ஆகாசத்திற்கு குடத்தின் பரிமாணம் என்றும், குடத்தை எடுத்துச் சென்றால் குடத்தினாகாசம் போகிறது என்றும் சொல்லுவது போல உபாதியான அந்தக்கரணத்தின் பரிமாணத்தைக்கொண்டு பரிமாணமும், அதன் உத்க்ராந்தி கமனங்களை வைத்து உத்க்ராந்தி முதலியவைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்தக்கரணம் என்ற உபாதி மோக்ஷத்தை கொடுக்கும் தத்வ ஸாக்ஷாத்காரம் உண்டாகும் வரையில் ஸம்பந்தப்பட்டிருக்கிறது. ப்ரளயத்திலும் ஸுஷுப்தி காலத்திலும் அவித்யா ரூபமாய் ஸூக்ஷ்மமாக இருக்கிறது. மேலும் ப்ரதானமான ‘**तत्त्वमसि**’ என்ற மஹாவாக்யம் ஜீவனுக்கு மஹா



னான ப்ரும்ஹத்தின் அபேதத்தை நிரூபணம் செய்கிறது. அதற்கு அனுகுணமாக **अणुः** முதலிய சப்தங்களுக்கு உபாதியாலேற்பட்ட அணுத்வம் என்று வ்யாக்யானம் செய்யவேண்டும்.

ஜீவன் ஸம்ஸாரியாக இருப்பதற்கு புத்தியின் ஸுகம், துக்கம், ஞானம், இச்சை முதலிய குணங்களே ஸாரமானது—ப்ரதானமானது. சுத்தமான ஆத்மாவிற்கு கர்த்ருத்வம் முதலிய ஸம்ஸார ஸம்பந்தம், புத்தியின் குணங்களுக்கு ஆத்மாவில் அத்யாஸமிருப்பதாலே என்று கருத்து. ஆகவே புத்தியின் பரிமாணத்தால் ஜீவனின் பரிமாணமும், புத்தியின் உத்க்ராந்தி முதலிய க்ரியையால் ஜீவனின் உத்க்ராந்தியும் வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது என்று மேலே கூறிய [1] ஸூத்ரத்தின் தாத்பர்யம் என்று ஆசார்ய பாஷ்யத்தில் விளக்கப்பட்டிருக்கிறது.

---

1. ‘तस्याः–बुद्धेः गुणाः इच्छा द्वेषः सुखं दुःखमित्येवमादयः तद्गुणाः सारः–प्रधानं यस्य आत्मनः संसारित्वे संभवति सः तद्गुणसारः, तस्य भावः तद्गुणसारत्वम् । न हि बुद्धेर्गुणैर्विना केवलस्यात्मनः संसारित्वमस्ति । बुद्ध्युपाधिधर्माध्यासनिमित्तं हि कर्तृत्वभोक्तृत्वादिलक्षणं संसारित्वमकर्तुरभोक्तुश्चासंसारिणो नित्यमुक्तस्य सत आत्मनः । तस्मात् तद्गुणसारत्वात् बुद्धिपरिमाणेनास्य परिमाणव्यपदेशः, तदुत्क्रान्त्यादिभिश्चास्योत्क्रान्त्यादिव्यपदेशो न स्वतः’ ( N. S. ब्र. सू. भा. पृ. 610 ) इति भाष्यम् ॥

ஆத்மா ஸ்வபாவத்தில் மஹானாயிருந்தும் புத்தியின் (உபாதியின்) குணத்தால் அணுவாகிறான் என்று ஸ்பஷ்டமாகவே

**बुद्धेर्गुणेनात्मगुणेन चैवाराग्रमात्रो ह्यवरोऽपि दृष्टः (श्वे. ६-८)**

என்ற ச்ருதி கூறுகிறது.

[1] ஸ்ரீப்ரம்ஹாநந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள் பின்வருமாறு இந்த ஸூத்ரத்தை வ்யாக்யானம் செய்திருக்கிறார்கள். விபுவான பரப்ரம்ஹமாக ஜீவனை சொல்லும் **तत्त्वमसि** முதலிய மஹாவாக்யம் ப்ரதானமானது. அதன் அர்த்தத்தை விளக்குவதற்காக ஜீவனுக்கு புத்தியின் தர்மங்களான அணுபரிமாணம் கர்த்ருத்வம் உத்க்ராந்தி முதலியவை இல்லையென்று சொல்லவேண்டியிருக்கிறது. கடுகில் மலை இல்லை என்று சொல்லுவதில்லை. கடுகில் மலையிருப்

---

1. 'तद्गुणसारत्वात् – तस्य अनवच्छिन्नब्रह्माभिन्नजीवप्रतिपादकमहावाक्यस्य गुणीभूतोऽर्थः सारः प्रतिपाद्यो यस्य तथात्वात्। तथाच महावाक्ये ब्रह्माभिन्नजीवबोधनार्थमन्तःकरणधर्माणामणुत्वोत्क्रान्त्यादीनां निषेधे, 'असङ्गो ह्ययं पुरुषः' इति श्रुत्या बोधनीये, औपाधिकं लोकसिद्धं तत्संबन्धं जीवे अनुवदन्ती श्रुतिः प्रतियोग्युपस्थापकतयोपयुज्यते, न तु स्वाभाविकाणुत्वादिकं प्रतिपाद्य मुख्यं महावाक्यं पीडयतीति भावः' (वे. सू. मु. पृ. 119) इति वेदान्तसूत्रमुक्तावलिः।



பதாக ப்ரஸக்தியேயில்லை. ஆகவே புத்தியின் தர்மங்களை நிஷேதம் செய்வதற்காக புத்திதர்மங்கள் ஜீவனிடமிருப்பதாக ப்ரஸக்தி வேண்டும். உலகத்தில் ஜீவனுக்கு சிறிய பரிமாணம், உத்க்ரமணம் முதலியவை புத்தி என்னும் உபாதியால் ஏற்பட்டவைகள் ப்ரஸித்தமானவை. ஜீவன் அணு வெளிக்கிளம்புகிறான் என்ற வேதவாக்யம் அவைகளை அனுவாதம் செய்கிறது. ஸ்வபாவமாக அணுவென்று சொன்னால் ப்ரதான வாக்யத்துக்கு விரோதமேற்படும் என்று மேலே கூறிய ஸூத்ரத்திற்கு விவரணம் செய்திருக்கிறார்கள்.

ஜீவனுக்கு ஸ்வபாவமான கர்த்ருத்வமிருந்தால் அது ஜீவனை விடாதபடியால் மோக்ஷத்திலிருக்கும். அது துக்கரூபமானதால் மோக்ஷமே ஸித்திக்காது. ஆகவே புத்தி தியானம் செய்தால் அதை உபாதியாகக்கொண்ட ஜீவனும் தியானம் செய்வதுபோல இருக்கிறது.

'ध्यायतीव लेलायतीव' (बृ. ६-३-७)

கர்த்ருத்வம் ஸ்வபாவமில்லை. புத்தியிலிருப்பது ஜீவனிடம் அத்யஸ்தமாயிருக்கிறது.

ஜீவனை ப்ரும்ஹமாக **'त्वं स्त्री त्वं पुमानसि'** (श्वे. ४-३) முதலான ச்ருதிகள் கூறுகின்றன.

'य आत्मनि तिष्ठन्नात्मानमन्तरो यमयति' (बृ. ५-७)

என்னும் ச்ருதி ப்ரும்ஹத்துக்கு அதீனமானவன் என்று வேருகக் கூறுகிறது. பேதம் அபேதம் இரண்டும் சொல்லப்படுவதால் ஜீவன் ப்ரும்ஹத்தின் அம்சம். அவயவமில்லாமையால் ப்ரும்ஹத்துக்கு அம்சம் என்பதற்கு अंश इव अंशः என்று விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

'ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः'

என்ற கீதாஸ்மிருதியும் (15-7) ஸ்பஷ்டமாக அம்சமென்று கூறுகிறது. கை முதலிய அம்சத்திலிருக்கும் துக்க வேதனை அம்சியான சரீரத்தில் ஸம்பந்தப்படுகிறது. ஆகவே அம்சமான ஒவ்வொரு ஜீவனுக்குமுள்ள துக்கம் அம்சியான ப்ரும்ஹத்தோடு ஸம்பந்தப்படுமாதலால் ப்ரும்ஹபாவம் என்ற மோக்ஷம் புருஷார்த்தமாகாது என்று ஸந்தேஹமுண்டாகும். ஆகாயம் முழுவதும் வ்யாபித்திருக்கும் ஸூர்யப்ரகாசம் நமது கைவிரல் என்ற உபாதியின் ஸம்பந்தத்தால் வக்ரமாகத்தோன்றினுலும் ஸூர்ய ப்ரகாசம் வாஸ்தவத்தில் வக்ரமாவதில்லை. குடத்தை எடுத்துச்செல்லும்பொழுது குடத்தை உபாதியாயுடைய ஆகாசம் செல்லுவதாகத் தோன்றினுலும் மஹாகாசம் வாஸ்தவத்தில் செல்லுவதில்லை. அதுபோல புத்தி முதலிய உபாதியோடு கூடிய ஜீவன் என்ற அம்சம் மித்யா ஞானத்தால் துக்கத்தையனுபவித்தாலும் பரமாத்மா துக்க ஸம்பந்தப்படுவதில்லை.



'तत्र यः परमात्मा हि स नित्यो निर्गुणः स्मृतः ।
न लिप्यते फलैश्चापि पद्मपत्रमिवाम्भसा ॥'

என்ற ஸ்மிருதியும் ஜீவனுடைய துக்கம் ப்ரம்ஹத்தோடு ஸம்பந்தப் படுவதில்லையென்று கூறுகிறது. இதுவிபரம்

'अंशो नानाव्यपदेशादन्यथा चापि दाशकितवादित्वमधीयत एके' (ब्र. सू. २-३-४३) 'अपि च स्मर्यते' (२-३-४५) 'प्रकाशादिवन्नैवं परः' (२-३-४६) 'स्मरन्ति च' (२-३-४७)

என்ற ஸூத்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. உபாதியின் ஸம்பந்தம் எல்லா ஜீவர்களுக்கு மிருப்பதால் ஒரு ஜீவன் செய்த கர்மாவின் பலன்வேறு ஜீவனுக்கும் வரலாம். ஆகையால் ஒரே ப்ரம்ஹத்தின் அம்சம் ஜீவன் என்பது பொருத்தமற்றது என்று சொல்லுவது சரியல்ல. ஒவ்வொரு ஜீவனுக்கு முபாதியானபுத்தி, அவித்யை எல்லாம் வெவ்வேருனது. ஆகவே எந்த புத்தியில் (உபாதியில்) அதிருஷ்டம் (கர்ம) இருக்கிறதோ அதன் பலனும் அந்த புத்தியிலுண்டாகும். அந்த புத்தியை உபாதியாகக்கொண்ட ஜீவனல் அனுபவிக்கப்படும். ஆகையால் கர்மபலனுக்கு ஸாங்கர்யம் வராது என்று

'असन्ततेश्चाव्यतिकरः' (ब्र. सू. २-३-४९)

என்ற ஸூத்ரம் நிருபணம் செய்கிறது.

அம்சாதிகரணத்தில் ஆரம்பம் முதல் இந்த ஸூத்ரம் வரையில் ப்ரம்ஹம் மஹாகாசம்போலும், ஜீவன் கடாகாசம் போலவுமிருக்கிறுர்கள்; ஜீவனுடைய துக்கம் ப்ரம்ஹத்துக்கு வராது, ஜீவர்களுக்கும் கர்மபல ஸாங்கர்யம் கிடையாது என்று சொல்லப்பட்டது. இது 'அவச்சேதவாதம்' எனப்படும்.

'[1]आभास एव च' (ब्र. सू. २-३-५०)

என்ற ஸூத்ரத்தில் ஜீவன் புத்தியில் ப்ரம்ஹத்தின் ப்ரதிபிம்பம். ஆகாசத்திலிருக்கும் ஒரே ஸூர்யன் பல ஜலங்களில் ப்ரதிபலிக்கிறுன். ஒரு ஜலமசைந்தால் அதிலிருக்கும் ப்ரதிபிம்பம்தான் அசையும், வேறு ஜலத்திலிருக்கும் ப்ரதிபிம்பம் அசைவதில்லை. அதுபோல ஒரு புத்தியில் ப்ரம்ஹ ப்ரதிபிம்பமான ஜீவனிடம் கர்மாவும் அதன் பலனுமிருந்தால் அது வேறு புத்தியின் ப்ரதிபிம்பத்திலிருக்காது. ஆகையால் கர்மபல ஸாங்கர்யம் வராது என்று சொல்லப்படுகிறது.

---

1. 'आभास एव चैष जीवः परस्यात्मनो जलसूर्यकादिवत्प्रतिपत्तव्यः। नच स एव साक्षात्, नापि वस्त्वन्तरम्। अतश्च यथा नैकस्मिन् जलसूर्यके कम्पमाने जलसूर्यकान्तरं कम्पते, एवं नैकस्मिन् जीवे कर्मफलसंबन्धिनि जीवान्तरस्य तत्संबन्धः। एवमप्यव्यतिकर एव कर्मफलयोः।' (N. S. ब्र. सू. भा. पृ 625-626) इति भाष्यम्।



'புத்தி ப்ரதிபிம்பம் ஜீவன்' என்பது ப்ரதிபிம்பவாதமெனப்படும்.

ஸூர்யன் ரூபமுள்ளவன். அவனுக்கு வெகு தூரத்திலுள்ளது ஜலம் என்னும் உபாதி. அதில் பரிச்சின்னமாயும் ரூபமுள்ளதாயுமான ஸூர்யன் ப்ரதிபலிக்கிறுன். ப்ரம்ஹம் எங்கும் நிறைந்தது. ரூபமில்லாதது. ஆகையால் ப்ரம்ஹம் புத்தி உபாதியில் ப்ரதிபலிக்கிறது என்பது சரியல்லவென்ற ஆக்ஷேபம் வருகிறது. மூன்ருவது அத்யாயத்தில்

'अम्बुवदग्रहणात्तु न तथात्वम्' (ब्र. सू. ३-२-१९)

என்னும் ஸூத்ரம் இந்த ஆக்ஷேபத்தை சொல்லுகிறது.

ஜலத்திலுள்ள ஸூர்ய பிரதிபிம்பம் ஜலம் விருத்தியடைந்தால் விருத்தியடையும், ஜலம் குறைந்தால் குறையும். ஜலத்தின் தர்மத்தையனுஸரித்த தர்மமுடையதாகும். அதுபோல ஜீவனும் உபாதியான புத்தியின் தர்மத்தையனுஸரித்து தர்மங்களையுடையவன் என்பதே ஜல ஸூர்யன் போல ப்ரதிபிம்பம் ஜீவன் என்பதின் தாத்பர்யம் என்று,

'वृद्धिह्रासभाक्त्वमन्तर्भावादुभयसामञ्जस्यादेवम्' (ब्र. सू. ३-२-२०)

என்ற ஸூத்ரம் கூறுகிறது.

இங்கு சில பூர்வாசார்யர்கள் '**आभास एव च**' என்று **एवकार** த்தைப்போட்டு ப்ரதிபிம்பம் என்று சொல்லியதால் ப்ரதிபிம்பவாதமே ஸித்தாந்த

மானது. ரூபமுள்ள பரிச்சின்ன வஸ்துதான் ப்ரதி பலிக்கும் என்ற நியமம் கிடையாது. எங்கும் நிறைந்த ரூபமற்ற ஆகாசம் நக்ஷத்திரங்களோடு கூட ஜலத்தில் ப்ரதிபலனமடைகிறது, ஆகையால் ப்ரம்ஹத்துக்கு புத்தியில் ப்ரதிபலனம் வரலாம் என்று ஸுலபமாய் தெரிந்துகொள்ளக்கூடியதாகை யால் 3வது அத்யாயத்தில் அந்த பதில் சொல்ல வில்லை. ஆகையால் ப்ரதிபிம்பவாதம் சித்தாந்தம் என்றும் வாதிக்கிறார்கள்.

சிலர், கண்ணுக்குப் புலனாவது கண்ணுக்குப் புலனான உபாதியில்தான் ப்ரதிபலிக்கும் என்ற நியமத்துக்கு ஒருவித பாதகமும் கிடையாது. एव என்ற பதம் விதி சக்தியை தடுக்கிறது என்று மீமாம்ஸா சாஸ்திரம் கூறுகிறது. आभास एव च என்ற ஸூத்ரத்தில் ப்ரதிபிம்பம் என்பதுக்கு யுக்தி ஒன்றும் சொல்லவில்லை. ஆகவே பிரதிபிம்பவாதம் பரமஸித்தாந்தமாகாது. பிரதிபிம்பம் என்று சொல் வதற்கு, அதுபோல உபாதியின் தர்மத்தை யனுஸரித்த தர்மங்களுடையது என்பதுதான் பொருள். ஆகையால் बुद्ध्यवच्छिन्नः जीवः என்ற அவச்சேதவாதமே பொருத்தமானது என்று நிரூபணம் செய்கிறார்கள். உபநிஷத் பாஷ்யத்தில் பிரதிபிம்பவாதத்தில் தோஷம் நிரூபிக்கப்பட்டிருக் கிறது. அவச்சேத பக்ஷத்தில் தோஷம் பாஷ்யத்தில் சொல்லப்படவில்லை. ஸூத்ரபாஷ்யத்தில் இரண்டு பக்ஷங்களையும் அனுஸரித்து பலவிடங்களில்



நிரூபணமிருக்கிறது. இரண்டு பக்ஷங்களும் அத்வைதத்துக்கு அனுகூலமானவையே.

### (4) ப்ரம்ஹஸ்வரூபம்

இதுவரையில் ஜீவன் சரீரத்தைவிட வேறான வன், ஸ்தூல சரீரமுண்டாகி விழும்போதோ, ஸ்ருஷ்டி ப்ரளய காலங்களிலோ, உத்பத்தி அழிவு இல்லாத நித்யன், ஸ்வயம்பிரகாச சைதன்யரூபன், ஸ்வபாவமாக மஹான். அவனிடம் உபாதியான புத்தியின் பரிமாணம், க்ரியை, கர்த்ருத்வம் முதலிய வைகள் அத்யஸ்தமாயிருக்கின்றன. அவன் மஹாகாசத்துக்கு குடத்திலிருக்கும் ஆகாசம்போல ப்ரம்ஹத்தின் அம்சம், அல்லது ஜலத்தில் தோன்றும் ஸூர்யனின் ப்ரதிபிம்பம்போல ப்ரம்ஹத்தின் ப்ரதி பிம்பம் என்றவாறு ப்ரம்ஹாபேதம் பொருந்தும் வகையில் சிந்தித்தோம்.

இனி ப்ரம்ஹ ஸ்வரூபத்தை சிந்திப்போம். உலகங்கள் ப்ரம்ஹத்தில் உண்டாகி, அதனதீன மாக இருந்து, அதிலேயே லயத்தையடைகின்றன. அந்த ப்ரம்ஹம் ஸத்தாகவும், சித்தாகவும், ஆனந்த ஸ்வரூபமாகவுமிருக்கிறது. அதற்கு தேசத்தாலோ, காலத்தாலோ, வஸ்துவாலோ பரிச்சேதம் (அளவு) கிடையாது. அது ஸர்வக்ஞ மாயும், ஸர்வசக்திவாய்ந்ததுமானது. எல்லா வஸ்துக்களிலுமிருந்துகொண்டு நியமனம் செய் கிறது என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. மேலும்,

हिरण्यश्मश्रुः हिरण्यकेशः आप्रणखात्सर्व एव सुवर्णः
(छा १-६-६)

என்று உருவமும் சொல்லப்பட்டிருக்கிறது.

'सत्यकामः सत्यसंकल्पः' (छा. ८-१-५)

என்று பலவித குணங்களும் சொல்லப்பட்டிரு கின்றன. இதிலிருந்து ப்ரபஞ்சத்திற்கு ஆதா மாய் பலவித குணங்களுடையது ப்ரம்ஹம், ஸப் பஞ்சம் ஸவிசேஷம் என்று கொள்ளவேண்டியிரு கிறது.

ப்ரம்ஹத்தை அக்ஷரம் (अक्षरं) என்று கூ கிறது வேதம். நாசமில்லாததாலும், எங்கும் வ்யா பித்ததாலும்

(न क्षरति, अश्नोति-व्याप्नोति इत्यक्षरं)

அக்ஷரமெனப்படும். அதில் ப்ரபஞ்சமில்லை. சரீரம், இந்திரியங்கள், பஞ்சபூதங்கள், பூதங்களாலுண் டான பௌதிகபதார்த்தங்கள், எல்லாவற்றிற்கும் காரணமான அவித்யை, இவைகளே ப்ரபஞ்ச என்று சொல்லப்படுகின்றன. இவைகள் யாவுமக்ஷ ரத்தில் கிடையாது என்று, ப்ருஹதாரண்யகத்தி அக்ஷர ப்ராம்ஹணத்தில்

'एतद्वै तदक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्ति, अस्थूल मनण्वह्रस्वमदीर्घमलोहितमस्नेहमच्छायमतमः अवाय्वनाका



मसङ्गमरसमगन्धमचक्षुष्कमश्रोत्रमवागमनोऽतेजस्कमप्राणममुख - ममात्रमनन्तरमबाह्यं न तदश्नाति किञ्चन न तदश्नाति कश्चन'
(बृ. ५ ८-८)

என்ற வாக்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ப்ரம்ஹம், अपाणिपादम् சரீரமில்லாதது என்றும், अदृश्य-मव्यवहार्यम् அறிந்துகொள்ளவும் வ்யவஹாரம் செய்யவும் முடியாதது என்றும், 'साक्षी चेता केवलो निर्गुणश्च' ஒருவித வ்யாபாரமுமில்லாத சித்ஸ்வரூப மான ஸாக்ஷி, ஒருவித தர்மமுமில்லாதது என்றும் வேதங்களில் நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே ப்ரம்ஹம் ஸப்ரபஞ்சம், ஸகுணம், ஸதர்மகம் என்று கொள்ளுவதா, அல்லது நிஷ்ப்ரபஞ்சம், நிர்குணம், நிர்தர்மகமா என்று விசாரிக்கவேண்டும். நிஷ்ப்ரபஞ்சத்வம்-நிர்குணத்வம், ஸப்ரபஞ்சத்வம்-ஸகுணத்வம் இரண்டும் ஒன்றுக்கொன்று விருத்த மானதால், ப்ரம்ஹம் ஸ்வபாவத்திலேயே ஸப்ர பஞ்சமாயும் ஸகுணமாயும், நிஷ்ப்ரபஞ்சமாயும் நிர்குணமாயுமிருக்க முடியாது. ப்ரம்ஹத்தை ப்ரதி பாதனம் செய்யும் ஸ்தலங்கள் எல்லாவற்றிலும் விசேஷங்களில்லாததாகவே ப்ரம்ஹம் கூறப்படு கிறது.

'अशब्दमस्पर्शमरूपमव्ययं तथाऽरसं नित्यमगन्धवच्च यत् ।
अनाद्यनन्तं महतः परं ध्रुवं निचाय्य तन्मृत्युमुखात्प्रमुच्यते' ॥
(काठ. ३-१५) 'यत्तदद्रेश्यमग्राह्यमगोत्रमवर्णमचक्षुःश्रोत्रं तदपाणि
पादं यद्भूतयोनिं परिपश्यन्ति धीराः ।' (मु. १-१-६) 'साक्षी
चेता केवलो निर्गुणश्च'। (श्वेता. ६-११) 'अथाऽत आदेशो नेति
नेति'। (बृ. ४ ३-६) 'नेह नानास्ति किञ्चन'॥ (काठ. ४-११)

ஆகையால் ப்ரம்ஹம் நிர்குணம் என்றே கொள்ள வேண்டும்.

'सर्वगन्धः सर्वरसः' 'सर्व एव सुवर्णः' 'सत्यकामः सत्यसङ्कल्पः'

என்று விசேஷங்களோடு கூடியதாகவும் ச்ருதிகள் கூறுகின்றன. ஆனால் ஸர்வகந்தமுள்ளவனை உபாஸிக்கவேண்டுமென்று உபாஸனையை விதிக்கின்றன. அவைகளுக்கு குணங்கள் ப்ரம்ஹத்தில் இருப்பதாக தாத்பர்யமில்லை. தாத்பர்யமில்லாதபோனாலும் வேறு ப்ரமாணங்களின் விரோதமில்லையானால் வஸ்து ஸித்திக்கும் அர்த்தவாதங்கள் **वज्रहस्तः पुरन्दरः** முதலியவை யாகத்தின் விதியில் தாத்பர்யமுள்ளவை. ஆனாலும் இந்திரனுக்கு வஜ்ராயுதம் தரித்த விக்ரஹமிருப்பதில் பாதக ப்ரமாணமில்லாமையால் தேவதைகளுக்கு விக்ரஹம் (சரீரம்)



ஸித்திக்கிறது. இதை தேவதாதிகரண ந்யாயம் என்று சொல்லுவார்கள். இங்கு **निर्गुणः**, **नेति नेति** முதலான, குணங்களை நிஷேதம் செய்யும் பாதக ப்ரமாணமிருப்பதால், உபாஸனாவிதியில் தாத்பர்யமுள்ள வாக்யங்களால் ப்ரம்ஹத்தில் தர்மங்கள் ஸித்திக்காது.

'अरूपवदेव हि तत्प्रधानत्वात्' (ब्र. सू. ३-२-१४)

என்ற ஸூத்ரம் குணங்களில்லையென்று நிருபணம் செய்யும் வாக்யங்கள் தாத்பர்யத்தோடு சொல்லுவதால் ப்ரம்ஹம் குணமில்லாததென்றே கொள்ள வேண்டுமென்று நிருபணம் செய்கிறது. ஸகுண வாக்ய விரோதமிருப்பதால் **निर्गुणः** என்பதற்கு ஹேயமான குணங்களில்லை என்று பொருள் கொள்வது பொருந்தாது. ஓரிடத்தில் ஒரு வஸ்து இருப்பதற்கு ப்ரஸக்தியிருந்தால், அந்தவிடத்தில் அது இல்லையென்று நிஷேதம் செய்வது ப்ராமாணிகமான மார்க்கம். கடுகில் மலையில்லை என்ற வாக்யம் ப்ராமாணிகமாக சொல்லப்படவில்லை. ப்ரம்ஹத்தில் தள்ளக்கூடிய கொடிய குணங்கள் இருக்கலாமென்ற ப்ரஸக்தியே யில்லாதபடியால் அதை நிஷேதம் செய்வதாக வ்யாக்யானம் செய்வது பொருத்தமற்றது.

**'पशुना यजेत'** என்ற விதிவாக்யத்தில் பசுவைக் கொண்டு யாகம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் பசு **छागः** (வெள்ளாடு)

என்பது பின்னால் வரும் 'अग्नये छागस्य वपायाः' என்ற மந்திரத்தால் ஸித்திக்கிறது என்று மீமாம்ஸகர்கள் சொல்லுகிறார்கள். அதுபோல निर्गुणः என்ற சொல்லுக்கு विना हेयैर्गुणादिभिः என்று ஹேய குணங்களில்லையென்று சொல்லும் வாக்யத்தால் ஹேய குணங்களில்லாதது என்று பொருள் கொள்ள வேண்டுமென்று சிலர் கூறுகிறார்கள். அது பொருத்தமற்றது. 'नेति नेति, नेह नानास्ति किञ्चन' என்று ஒருவித குணமுமில்லையென்று சொல்லியிருப்பதால் சில விசேஷ குணங்களில்லையென்பதில் தாத்பர்யம் சொல்லமுடியாது. அப்படியானால் 'मा हिंस्यात् सर्वा भूतानि' என்ற நிஷேத வாக்யத்தில் 'ब्राह्मणं न हन्यात्' என்ற வாக்யத்தையனுஸரித்து ப்ராம்ஹண ஹிம்ஸை மாத்திரமே நிஷேதம் செய்யப்பட்டிருக்கிறது என்று சொல்ல நேரிடும். ஆலோசித்துப் பார்த்தால் 'काकेभ्यो दधि रक्ष्यताम्' காக்கை தயிரை நாசம் செய்யாமல் பார்த்துக்கொள்ளவேண்டுமென்பதற்கு காக்கையைப்போல பூனை முதலியவைகளும் நாசம் செய்யாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்ற ப்ரமாணமிருப்பதால் காக்கை முதலியவைகள் தயிரை நாசம் செய்யாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று பொருள் சொல்லுகிறோம். அதுபோல 'विना हेयैर्गुणादिभिः' என்ற வாக்யம் எல்லா தர்மங்களுமில்லையென்



பதையே கூறுகிறது, என்று சொல்லுவதே பொருத்தமானது.

நிர்குணம் என்பதால் ப்ராகிருதமான குணமில்லையென்று போதிக்கப்படுகின்றது. ஏனெனில் सर्वगन्धः என்று அப்ராகிருதகந்த முள்ளதாக சொல்லப்பட்டிருக்கிறது. என்று சொல்லுவதும் சரியானதல்ல. ப்ரகிருதி ஸம்பந்தமில்லாத கந்தம் முதலியவைகளிருப்பதில் ப்ரமாணமேயில்லை. सर्वगन्धः என்ற ச்ருதி ப்ரம்ஹ கார்யங்களின் குணமான கந்த மெல்லாவற்றையும் சொல்லுகிறது. அப்படிக் கொள்ளாவிட்டால் सर्वगन्धः என்று सर्व பதமிருப்பதால் அப்ராக்ருத துர்கந்தமும் ப்ரம்ஹத்தில் ஸித்திக்கலாமென்று சொல்லநேரிடும். ஆகையால் ஸகுணவாக்ய விரோதத்தால் நிர்குண வாக்யங்கள் ஒருவித குணமுமில்லாதது ப்ரம்ஹம் என்பதைத் தவிர வேறுவிதமான பொருளை விளக்க முடியாததால் ப்ரம்ஹம் நிர்குணம் என்றே கொள்ள வேண்டும்.

ப்ரம்ஹத்திலிருந்து உலகஸிருஷ்டியை வேதத்தில் சொல்லியிருப்பதும் ப்ரம்ஹம் நிர்குணம் என்று போதிப்பதற்காகவே.

### अध्यारोपापवादाभ्यां निष्प्रपञ्चं प्रपञ्च्यते ।

ப்ரம்ஹத்தில் உலகமில்லையென்று மாத்திரம் சொன்னால் வீட்டில் தேவதத்தன் இல்லையென்றால் வெளியில் இருக்கிறான் என்று ஸித்திப்பதுபோல,

ப்ரம்ஹத்தைத் தவிர வேறிடத்தில் உலகமிருக்கு மென்ற எண்ண முண்டாகும். ப்ரம்ஹத்தில் தான் உண்டாகிறது என்று சொல்லுவதினுல், அது இருக்குமிடமாக அறியப்படுவது ப்ரம்ஹமே அவ் விடத்தில் உலகமில்லையென்ருல் உலகம் மித்யை, ஆகவே நிஷ்ப்ரபஞ்சம் ப்ரம்ஹம் என்று ஸித்திக் கிறது. இந்த தாத்பர்யத்தாலே '**तदस्य रूपं प्रतिचक्षणाय**' (बृ. ४-५ १९) என்று ப்ரம்ஹத்தை அறிவதற்காக உலக ஸ்வரூபமென்று கூறப்பட்டிருக் கிறது.

ப்ரம்ஹத்தில் தர்மமே கிடையாதென்ருல் தர்மங்களிருப்பதாகச் சொல்லும் ச்ருதி வாக்கியங் கள் அர்த்தமில்லாமல் அப்ரமாணமாய்விடுமென்று ஆக்ஷேபம் வந்தால் அதற்கு ஸமாதானம்,

'**प्रकाशादिवच्चावैयर्थ्यात्**' (ब्र. सू. ३-२-१५)

என்ற ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸூர்யப்ரகாசம் எங்கும் வ்யாபித்திருக்கிறது. ஜன்னல் வழியாக வரும் வெளிச்சம் உபாதி வசத் தால் வக்ரமாய்த் தெரிகிறது. அதுபோல் ப்ரம்ஹத் தில் உபாதி நிமித்தமாக விசேஷங்களிருக்கின்றன. அவைகள் பாரமார்த்திகமில்லை. ஆனுலும் அஸத் தல்ல வ்யாவஹாரிகமானவை. ஆகையால் ஸகுண ச்ருதிகளுக்கு (वैयर्थ्य) அர்த்தமில்லாத தன்மை யில்லை. அவை வ்யாவஹாரிக ஸவிசேஷத்வத்தைப் போதிக்கின்றன.



ப்ரம்ஹத்தில் வ்யாவஹாரிகமான தர்மங்கள் இருந்தாலும் ப்ரம்ஹம் நிர்தர்மகமென்று கூறப்படு கிறது. ஸத்தை பாரமார்த்திகம், வ்யாவஹாரிகம் ப்ராதிபாஸிகம் என்று மூன்றுவிதம். பாரமார்த்திக ஸத்தையைவிட வ்யாவஹாரிகஸத்தை அபகிருஷ்ட மானது. (न्यूनसत्ता) அதைவிட அபகிருஷ்டமானது ப்ராதிபாஸிக ஸத்தை. ஆகாசத்தில் நீலரூபம் தோன்றுகிறது. அது ப்ராதிபாஸிகம். ஆகாசம் வ்யாவஹாரிகம். ஆனுலும் ஆகாசம் நீலரூபத்தை யுடையது என்று கொள்ளுவதில்லை. ஆகவே

**स्वसमानसत्ताकधर्मवत्त्वं सधर्मकत्वम्। स्वसमानसत्ताकधर्मवत् यद्यत् तत्तद्भिन्नत्वं निर्धर्मकत्वम्।**

பாரமார்த்திகமான ப்ரம்ஹத்திலிருக்கும் விசேஷங் கள் பாரமார்த்திகமல்ல. அபகிருஷ்டமான ஸத்தை யுடையவை. ஆகையால் ப்ரம்ஹம் ஸதர்மகமல்ல. நிர்தர்மகமே. ப்ரம்ஹத்தில் பாரமார்த்திக தர்மத் தின் அபாவம் என்ற பாரமார்த்திக தர்மமிருந்தால் நிர்தர்மகமென்று ஸித்திக்காது. அபாவமில்லை யானுலும் நிர்தர்மகமென்று சொல்லமுடியாது என்ற ஆக்ஷேபமுண்டாகிறது.

அதற்கு பரிஹாரம்,

'[1] **आह च तन्मात्रम्**' (ब्र. सू. ३-२-१६) '**दर्शयति चाथो अपि स्मर्यते**' (ब्र. सू. ३-२-१७)

---

1. 'ननु निर्विशेषत्वं तात्त्विकत्वेन धर्मशून्यत्वं, तच्चासंभवि' तस्यैव तात्त्विकत्वात्, तत्राह – '**आह च तन्मात्रमिति।**'

என்ற ஸூத்ரங்களால் சொல்லப்பட்டிருக்கிற தென்று ஸ்ரீ ப்ரம்ஹாநந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள் கூறுகிருர்கள்.

நிர்விசேஷத்வம், நிர்தர்மகத்வம், தர்மாபாவம் என்பது ப்ரம்ஹத்தைவிட வேறில்லை. அது அதிகரணமான ப்ரம்ஹ ஸ்வரூபமே. பூமியில் குடத்தின் அபாவமென்பது வேறில்லை. பூமி ஸ்வரூபமே. ஆகையால் விசேஷத்தின் அபாவமென்பது ப்ரம்ஹத்தைவிட வேறில்லாதபடியால் **स्वभिन्नधर्मवत्त्वाभावात्** நிர்தர்மகமாகலாம்.

**'अथात आदेशो नेति नेति, न ह्येतस्मादिति नेत्यन्यत् परमस्ति' (बृ. ४-३-६)**

---

'अस्थूलम्' इत्यादिश्रुतिः यन्निर्विशेषत्वं ब्रह्मण आह तत् तत्स्वरूपमात्रं, नातिरिक्तम्। 'दर्शयति चाथो अपि स्मर्यते' इति। अथो-अत एव 'अथात आदेशो नेति नेति नह्येतस्मादिति नेति अन्यत्परमस्ति।' इत्यादिश्रुतिः तदतिरिक्तमात्रं निषिध्य तत्स्वरूपं निषेधावधिभूतं दर्शयति। नहीत्यादि। नेति पूर्वोक्तनिषेधः एतस्मात् ब्रह्मणः अन्यत् नहि इत्येवंरूपः। परं निषेध्यादन्यत्तु ब्रह्मास्तीत्यर्थः। 'ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि' इत्युपक्रम्य, 'न सत्तन्नासदुच्यते' इत्यादिना तथैव स्मर्यतेऽपि'। (वे. सू. मु. पृ. 145-146) इति वेदान्तसूत्रमुक्तावलिः॥



என்ற ச்ருதி, नेति என்ற நிஷேதம் **एतस्मादन्यत् न** ப்ரம்ஹத்தைவிட வேருனதில்லை. **परमस्ति** நிஷேதாவதியான ப்ரம்ஹமிருக்கிறது என்று கூறுகிறது.

**'ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि, न सत्तन्नासदुच्यते।' (गी. १३-१३)**

என்ற ஸ்மிருதியும் நிஷேதம் ப்ரம்ஹரூபமென்று சொல்லுகிறது.

ஒருவித தர்மமுமில்லாததால் ப்ரம்ஹம் வாக்கிஞல் சொல்லமுடியாதது.

**'यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह' (तै. ३-२-४)**

வாக்குக்கும், மனதுக்கும் எட்டாததால் அவ்யக்தம் என்றும் சொல்லப்படுகிறது. உப்புக்கட்டி அகண்டலவணரஸமயமாயிருப்பதுபோல ப்ரம்ஹம் அகண்ட சைதன்ய ஸ்வரூபம். அந்த ப்ரம்ஹத்தை யோகிகள் த்யானகாலத்தில் பார்க்கிருர்கள் என்று வேதமும் ஸ்மிருதிகளும் கூறுகின்றன. நிர்தர்மகமானபடியால் மௌனமாக உபதேசம் செய்வதாக உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ப்ரம்ஹத்தில் ஒருவிதமான விசேஷமுமில்லையென்ருல் பேதமிருக்கமுடியாது. ஆகவே த்யானத்தில் கர்மாவாகவும் கர்தாவாகவுமிருக்க முடியாது என்ற ஆக்ஷேபம் வருகிறது. ஆகாசத்திலுள்ள ஸூர்யன் பல ஜலங்களில் வெவ்வேருக ப்ரதிபலன மடைவதுபோல ஒரே ஆத்மா பல உபாதிகளில் ப்ரதிபிம்பமடைகிறது. ப்ரதிபிம்பங்கள்

வெவ்வேறு ஆனாலும் அவைகளின் ஸ்வரூபம் பிம்பமே. ஆகையால் ஒருவித ஆக்ஷேபமுமில்லை.

‘यथा ह्ययं ज्योतिरात्मा विवस्वानपो भिन्ना बहुधैकोऽनुगच्छन् ।
उपाधिना क्रियते भेदरूपः देवः क्षेत्रेष्वेवमजोऽयमात्मा ॥’

என்று ச்ருதியும்,

‘एक एव हि भूतात्मा भूते भूते व्यवस्थितः ।
एकधा बहुधा चैव दृश्यते जलचन्द्रवत् ॥’

என்ற ஸ்மிருதியும் கூறுகிறது.

ஆரம்பணாதிகரணம் முதலிய அதிகரணங்களில் ப்ரம்ஹமே ஸத்யம், உலகம் அநிர்வசநீயம் என்று சொல்லப்பட்டது. ஆயினும் சிற்சில வாக்யங்களிலிருந்து ப்ரம்ஹத்துக்கு வேறான பரமார்த்தமான இரண்டாவது வஸ்து இருப்பதாகத்தோன்றுகிறது.

‘य आत्मा स सेतुर्विधृतिः (छा. ८-४-१)’

என்று ஆத்மாவை (ஸேதுவாக) அணையாகச் சொல்லுகிறது. உலகத்தில் அணையிருந்தால் அதைத்தவிர வேறு வஸ்து இருக்கும். ஆகையால் ஆத்மா ஸேதுவானால் வேறு வஸ்து இருக்க வேண்டும். மேலும் ப்ரம்ஹத்தை நான்கு பாதங்களுள்ளது என்று சொல்லியிருக்கிறது. உலகத்தில் அளவிடப்பட்ட வஸ்துவுக்கு வேறான வஸ்து இருக்கிறது. அதனால் இரண்டாவது வஸ்து இருக்க வேண்டும். ஜீவர்கள் ஸுஷுப்தி ஸமயத்தில் ப்ரம்ஹத்தோடு ஸம்பந்தமடைகிறார்கள்.



‘सता सौम्य तदा संपन्नो भवति’ (छा. ६-८-१)

அதனாலும் வேறு வஸ்து வேண்டும். अन्तरादित्ये என்று ப்ரம்ஹத்திற்கு ஆதாரமாக ஸூர்யன், கண் முதலியவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகவே ப்ரம்ஹம் இரண்டாவது வஸ்துவை உடையது. அத்விதீயம் என்பது பொருந்தாது என்ற ஆக்ஷேபத்தை,

‘परमतः सेतून्मानसंबन्धभेदव्यपदेशेभ्यः’ (ब्र. सू. ३-२-३१)

என்ற ஸூத்ரத்தில் சொல்லி, அதற்கு ஸமாதானத்தை ‘सामान्यात्तु’ (३-२-३२) முதலிய பல ஸூத்ரங்களால் பாதராயண மஹரிஷி நிரூபணம் செய்திருக்கிறார். ப்ரம்ஹத்திலிருந்து எல்லா வஸ்துக்களுமுண்டாகின்றன. காரணத்தைவிட கார்யங்களுக்கு தனி ஸத்தையில்லை. காரணமே கார்யங்களின் தத்வம். ஆகையால் ப்ரம்ஹத்தை விட வேறான, ப்ரம்ஹத்திற்கு ஸமமான ஸத்தையுடைய வஸ்து இருப்பதில் ஒருவித ப்ரமாணமும் இல்லை. ஆத்மாவை ஸேது என்று சொல்லியிருப்பதிலிருந்து உலகத்திலுள்ள ஸேதுபோல வேறான வஸ்து இருக்கவேண்டுமென்று கல்பிக்கவேண்டும். அது ப்ரமாணவிருத்தமானது. ஆகையால் அணை ஜல ப்ரவாஹத்தை சிதறிப்போகவிடாமல் தடுப்பது போல, ப்ரம்ஹம் உலக மரியாதையை தாரணம் செய்கிறது என்ற ஸாதாரணமான தர்மத்தை

வைத்துக்கொண்டு ஸேது என்று சொல்லப்பட்ட[illegible]
இரண்டாவது வஸ்து இருக்கவேண்டியதில்லை.

**चतुष्पात् ब्रह्म** என்று உபாஸனை செய்வதற்[illegible]
சொல்லப்பட்டது. ஒரு ரூபாயில் நாலு பாதங்[illegible]
(கால்கள்) இருப்பதாக வ்யவஹாரத்தில் வைத்[illegible]
கொள்ளுகிறோம். அதுபோல, நிர்விசேஷ[illegible]
ப்ரம்ஹத்தில் எல்லோருக்கும் புத்தி ஸ்திர[illegible]
இருக்கமுடியாதாகையால் விகாரங்கள் வழியா[illegible]
அளவைக்கல்பித்து உபாஸனை சொல்லப்பட்டி[illegible]
கிறது. ஆகவே **चतुष्पात् ब्रह्म** என்ற ச்ருதி [illegible]
வஸ்து இருக்கிறதென்று போதிப்பதற்காகச்சொ[illegible]
வில்லை. ஆகாசத்திலிருக்கும் ஸூர்ய ப்ரகாசம் [illegible]
வித ஜலங்கள் என்ற உபாதிகளில் பிரதிபலிக்கிற[illegible]
வெவ்வேருக ஸ்தானபேதத்தால் சொல்[illegible]
படுகிறது. உபாதியான ஜலம் போய்விட்டா[illegible]
பிரதிபிம்பம் ஆகாசத்திலிருக்கும் ஸூர்ய பிம்பத்[illegible]
அடைந்ததாக சொல்லுகிறார்கள். ஆனால் பிரதி[illegible]
பம் என்பது பிம்பமே தவிர வேறில்லை. அதுபோ[illegible]
ஆத்மா ஒன்ருயிருந்தாலும் ஸுஷுப்தி காலத்[illegible]
புத்தி என்ற உபாதி லயத்தை அடைவதால் ஆ[illegible]
ப்ரதிபலித்தவன் பிம்பமான ப்ரம்ஹத்தை அ[illegible]
தாக வேதம் கூறுகிறது. இரண்டிற்கும் பேதமி[illegible]
ஆதலால் **स्वमपीतो भवति** என்று தன் ஸ்வரூபத்[illegible]
லயமடைகிருன் என்று சாந்தோக்யம் கூறுகிற[illegible]

ப்ரம்ஹத்தைத்தவிர வேறு வஸ்து கிடையா[illegible]
என்று ஸ்பஷ்டமாக வேதங்களில் நிஷேதம் செ[illegible]



[illegible]ருப்பதால் ப்ரம்ஹம் அத்விதீயம் (த்வைதமற்றது)
[illegible]று ஸித்திக்கிறது என்று

[1]**तथान्यप्रतिषेधात् (ब्र. सू. ३-२-३६)**

[illegible]ற ஸூத்ரத்தில் நிருபணம் செய்யப்பட்டிருக்
[illegible]. அதன் பாஷ்யத்தில் ஆசார்யாள் பல
[illegible]திகளை ப்ரமாணமாக காண்பித்திருக்கிறார்கள்.

**'यावान्वाऽयमाकाशः तावानेषोऽन्तर्हृदय आकाशः**
[illegible] ८-१-३)

[illegible]று ஆத்மாவை ஸர்வகதமாக சொல்லியிருக்
[illegible]. ஆகையால் ஸர்வ வஸ்துக்களோடு ஸம்பந்த
[illegible]டயது என்பதால் ப்ரம்ஹத்தைத்தவிர வேறு

---

1. 'तथा अन्यप्रतिषेधादपि न ब्रह्मणः परं वस्त्वन्तरमस्तीति [illegible]ते । तथा हि 'स एवाधस्तात्' (छा. 7-25-1) 'अहमेवा-[illegible]' (छा. 7-25-1) 'आत्मैवाधस्तात्' (छा. 7-25-2) [illegible] तं परादाद्योऽन्यत्रात्मनः सर्वं वेद' (बृ. 2-4-6) 'ब्रह्मैवेदं [illegible]' 'आत्मैवेदं सर्वं' (छा. 7-25-2) 'नेह नानास्ति किञ्चन' ([illegible] 6-4-19) 'यस्मात्परं नापरमस्ति किञ्चित्' (श्वे. 3-9) [illegible]ब्रह्मापूर्वमनपरमनन्तरमबाह्यम् (बृ. 4-15-19) इत्येवमादि-[illegible]नि स्वप्रकरणस्थानि अन्यार्थत्वेन परिणेतुमशक्यमानानि ब्रह्म-[illegible] वस्त्वन्तरं वारयन्ति । सर्वान्तरश्रुतेश्च न परमात्मनोऽन्यो-[illegible]स्तीत्यवधार्यते' (N. S. ब्र. सू. भा. पृ. 627) इति [illegible] ॥

'तथाहि लोकेऽनुभवः, शुक्तिका हि रजतवदवभासते, एकश्चन्द्रः सद्वितीयवदिति ।'

என்று பாஷ்யகாரர்கள் நிரூபணம் செய்கிறார்கள். ஒருவித தர்மமுமில்லாதபடியால் எல்லா அதிகாரிகளுடைய மனதிலும் ஸுலபமாகத் தோன்றுது. ஆகையால் அது 'அவ்யக்தம்' எனப்படும். 'तदव्यक्तमाह हि'(ब्र. सू. ३-२-२३) என்பது ஸூத்ரம்.

'क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम्'

என்ற கீதையும் (12-5) அவ்யக்த பதத்தால் ப்ரம்ஹத்தைக் குறிப்பிடுகிறது. அது 'वासुदेव' என்றும் 'सदाशिवः' என்றும் கூறப்படுகிறது என்று 'ஈச்வரப்ரதிபத்திப்ரகாசம்' என்ற புஸ்தகத்தில் ஸ்ரீமதுஸூதன ஸரஸ்வதீ ஸ்வாமிகள் கூறியிருக்கிறார்கள். நிர்குணமான ஸச்சிதானந்த ஸ்வரூபமான பரப்ரம்ஹமே பரமார்த்த ஸத்யம்.

'प्रत्यस्तमितभेदं यत्सत्तामात्रमगोचरम् ।
वचसामात्मसंवेद्यं तज्ज्ञानं ब्रह्मसंज्ञितम् ॥'

என்ற விஷ்ணு புராணம் ஒருவித பேதமுமில்லாததாயும், வாக்கினுல் சொல்ல முடியாததுமான ஞானமே ப்ரம்ஹ சப்தத்தின் பொருள் என்று கூறுகிறது.

'सदर्थे कल्पितं सर्वं; सदर्थो विष्णुरेव हि'



என்ற பாரத வசனம் எங்கும் நிறைந்தது ஸத்து, அதிலேயே எல்லாம் கல்பிக்கப்பட்டது (அநிர்வசனீயம்) என்று கூறுகின்றது.

'ज्ञानस्वरूपमत्यन्तं निर्मलं परमार्थतः ।
तदेवार्थस्वरूपेण भ्रान्तिदर्शनतः स्थितम् ॥'

'ज्ञानं यथा सत्यमसत्यमन्यत् ।'

என்ற விஷ்ணுபுராண வாக்யங்கள் பரமார்த்த ஞானஸ்வரூபமே உலகமாக ப்ரமத்தால் தோன்றுகிறது என்றும், ஞானமே (ப்ரம்ஹமே) ஸத்யம் மற்றவை அஸத்யமென்றும்,

'द्वैतिनोऽतथ्यदर्शिनः'

என்ற வாக்யம் த்வைத வஸ்துவை ஸத்யமாகச் சொல்லுபவர்கள் உண்மையானதை அறிந்தவர்களில்லையென்றும் கூறுகின்றன. ஆகவே அத்விதீயமான ஸச்சிதானந்த ஸ்வரூபமான ப்ரம்ஹமே பரமார்த்த ஸத்யம்.

அதில் மனதை ஈடுபடுத்துவது உத்தமாதிகாரிகளுக்கு மாத்திரம் ஸாத்தியமானதால் மந்தாதிகாரிகளின் மனது குணங்களில் ப்ரவேசிக்குமாதலால் அந்த ப்ரம்ஹத்தையே அவித்யோபாதியால் கல்பிக்கப்பட்ட குணங்களோடு கூடியதாக வேதங்கள் நிரூபணம் செய்து த்யானம் செய்யும்படி உபதேசிக்கின்றன. ஸகுண ப்ரம்ஹம், அபர ப்ரம்ஹம் எனப்படும். இவ்விதம் ஸகுண ப்ரம்ஹ

த்யானம் செய்யச்செய்ய மனதிற்கு ஏகாக்ரதை யுண்டாகி அந்த ப்ரம்ஹமே உபாதியற்றதான பரப்ரம்ஹமாக ஆவிர்பாவத்தையடையும்.

> ‘निर्विशेषं परं ब्रह्म साक्षात्कर्तुमनीश्वराः ।
> ये मन्दास्तेऽनुकम्प्यन्ते सविशेषनिरूपणैः ॥
> वशीकृते मनस्येषां सगुणब्रह्मशीलनात् ।
> तदेवाविर्भवेत्साक्षादपेतोपाधिकल्पनम् ॥’

N. S. ब्र. सू. भा. पृ. *192.*

என்று கல்பதரு கூறுகிறது. ஸ்குணரூபம் மாயிகமே. அது ध्येयं ब्रह्म अपरम्, நிர்குண ப்ரம்ஹம் பரமார்த்த ஸத்யம் **ज्ञेयं ब्रह्म** என்று நமது ஆசார்யாளின் ஸித்தாந்தஸாரம்.

### *(5) ஜீவப்ரம்ஹ ஸம்பந்தமும், மோக்ஷமும்*

இனி ஜீவன் ப்ரம்ஹத்தைக்காட்டிலும் அத்யந்தம் வேருனவனு, அல்லது பேதம் அபேத மிரண்டுமுள்ளவனு? இரண்டுமிருந்தால் இரண்டு முண்மையானதா என்பதை ப்ரம்ஹ ஸூத்ரத்தில் சொல்லிய வழியில் சிந்திப்போம். ப்ருஹதாரண்யகத்தில் மைத்ரேயீ ப்ராம்ஹணத்தின் ஆரம்பம் முடிவு இவைகளை விமர்சனம் செய்தால் ப்ரம்ஹதர்சனத்தால் அமிருதத்வம் என்ற மோக்ஷம் ஸித்திக்கிறது என்னும் விஷயத்தை நிரூபணம் செய்வதாகத்தெரிகிறது. ஆனல்,



‘आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति’ (बृ. ४-४-५)

என்று ப்ரியங்களை அனுபவிக்கும் போக்தாவான ஜீவனை நிரூபணம் செய்ய ஆரம்பித்திருக்கிறது. ஆகவே ‘आत्मा द्रष्टव्यः’ என்ற வாக்கியத்திற்கு ஜீவனை ஸாக்ஷாத்கரிக்க வேண்டுமென்றுதான் தாத்பர்யம் தோன்றுகிறது என்ற ஒரு ஆக்ஷேபம் வருகிறது. அதற்கு ஸமாதானம் சொல்லுவதற்காக மூன்று மஹரிஷிகளின் அபிப்ராயங்கள் ப்ரம்ஹ ஸூத்ரத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

‘प्रतिज्ञासिद्धेर्लिङ्गमाश्मरथ्यः’ (ब्र. सू. १-४-२०)

‘उत्क्रमिष्यत एवंभावादित्यौडुलोमिः’ (ब्र. सू. १-४-२१)

‘अवस्थितेरिति काशकृत्स्नः’ (ब्र. सू. १-४-२२)

ஜீவனுக்கும் ப்ரம்ஹத்திற்கும் பேதமும், அபேதமுமிருக்கிறது. நெருப்பிலிருந்து நெருப்புத் துளிகள் கிளம்புவதுபோல ப்ரம்ஹத்தினிடமிருந்து ஜீவர்கள் வருகிருர்கள் என்று வேதம் சொல்லுவதால் ஜீவன் ப்ரம்ஹத்தின் விகாரம். நெருப்புத் துளிகள் அக்னியாகத் தோன்றுவதால் நெருப்பைக் காட்டிலும் அத்யந்தம் பேத முள்ளவையல்ல. அக்னியோடு அத்யந்தமபேதமுள்ளவையுமல்ல. அப்படியானல் எல்லா துளிகளும் அக்னியாகி விட்டதால் ஒன்றுக்கொன்று பேதமில்லாமல் போய் விட நேரிடும். ஆகையால் அக்னித் தன்மையால்

அபேதமும், அந்தந்த துளிகளின் தன்மையால் பேதமுமுடையவை. அதுபோல ஜீவன் ப்ரம்ஹத்தின் விகாரம், சைதன்யத்தன்மையால் அபேதமும் ஜீவத்தன்மை ஈச்வரத்தன்மையால் பேதமும் இருக்கிறது. அவச்சேதக பேதத்தால் (अवच्छेदकभेदात्) பேதமும், அபேதமுமிருக்கிறது. ஆகவே,

'एकविज्ञानेन सर्वविज्ञानं'

ஒன்று தெரிந்தால் எல்லாம் தெரியும் என்ற ப்ரதிக்ஞையை நிர்வாஹம் செய்வது ஜீவப்ரம்ஹா பேதத்தை ஆதாரமாகக்கொண்டு செய்யவேண்டுமென்று ஆச்மரத்யரின் மதம்.

ஜீவனுக்கும் ப்ரம்ஹத்திற்கும் பேதமும் அபேதமுமிருக்கிறது. ஆனால் ஒரே ஸமயத்தில் இல்லை. ஜீவனிடம் ஸம்ஸாரபந்தம் ஸத்யமாகவுள்ளது. த்யானுதிகளால் கலக்கமற்று சரீரத்தைவிட்டு கிளம்பி மோக்ஷத்தையடையும்போது அபேதமிருக்கிறது. ஸமுத்ரத்தைவிட வேருன கங்கை முதலிய நதிகளுக்கு தனித்தனியாக நாமமும் ரூபமுமிருக்கிறது. ஸமுத்ரத்தையடையும்போது நாமமும் ரூபமும் போய்விடுகிறது. ஸமுத்ரத்தோடு ஒன்ருகி விடுகின்றன என்று,

'यथा नद्यः स्यन्दमानाः समुद्रेऽस्तं गच्छन्ति नामरूपे विहाय
तथा विद्वान्नामरूपाद्विमुक्तः परात्परं पुरुषमुपैति दिव्यम् ॥"
(मु. ३-२-८)



என்னும் முண்டகோபநிஷத்து நிரூபணம் செய்கிறது. ஸத்யமான பேதமுள்ள ஜீவன் மோக்ஷத்தில் அபேதத்தை அடைகிருன். பாஞ்சராத்ரத்திலும்,

'आमुक्तेर्भेद एव स्याज्जीवस्य च परस्य च ।
ततः परं न भेदोऽस्ति भेदहेतोरभावतः ॥'

என்று பந்தகாலத்தில் பேதமும் முக்தி காலத்தில் அபேதமும் சொல்லப்பட்டிருக்கிறது என்று ஔடுலோமியின் மதம்.

காசக்ருத்ஸ்ன மஹரிஷி, ஜீவன் ப்ரம்ஹத்தின் விகாரமல்ல. பிரம்ஹத்தைக்காட்டிலும் வேருனவனுமல்ல. ப்ரம்ஹமே ஜீவன். அவித்யையால் கல்பிதமான பேதமுடையவன்.

'अनेन जीवेनात्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि', (छा. ६-३-२) 'सर्वाणि रूपाणि विचित्य धीरो नामानि कृत्वाऽभिवदन्यदास्ते' (पुरुषसूक्तं)

முதலிய வேதங்கள் ப்ரம்ஹமே ஜீவனுயிருப்பதாகச் சொல்லுகின்றன. ஆகையால் மைத்ரேயீ ப்ராம்ஹணத்தில் ஜீவனை ஆரம்பித்து உபதேசம் செய்தது பொருத்தமானது என்று கூறுகிருர்.

முதல் மதத்தில் பேதம், அபேதம் இரண்டும் ஒரே வஸ்துவிலிருந்தாலும் அவச்சேதகம் வேருனபடியால் அவ்விரண்டிற்கும் விரோதமில்லை என்று கருத்து. இரண்டாவது மதத்தில் இரண்டும் ஒரே

ஸமயத்தில் இல்லை. வெவ்வேறு ஸமயத்திலிருப்ப
தால் விரோதமில்லை. மூன்றாவது மதத்தில்
அபேதமே வாஸ்தவமானது. எப்பொழுதுமிருக்
கிறது. பேதம் அவித்யையால் கல்பிதம், அநிர்வச
நீயம். குடத்திலிருக்கும் ஆகாசத்திற்கும், மஹா
காசத்திற்கும் அபேதம் வாஸ்தவம். பேதம், குடம்
என்ற உபாதியால் கல்பிக்கப்பட்டது. அதுபோல
கொள்ள வேண்டும்.

[1] சிலர் மூன்றாவது ஸூத்ரத்தால், ஜீவனிடம்

---

1. केचित्तु 'अवस्थितेरिति काशकृत्स्नः' इति सूत्रस्याव
स्थितेरिति पदस्य 'य आत्मनि तिष्ठन्' इत्यादिश्रुत्युक्तायां जीवात्मनि
परमात्मनः स्थितौ स्वारस्यं मन्यमानाः, परिदृश्यमाने शरीरे जीवात्मन
इव जीवात्मनि परमात्मनः आत्मतयाऽवस्थितेः जीवशब्देन परमात्मा
भिधानमुपपन्नमिति सूत्रार्थं वर्णयन्ति ॥

अत्र विपरीतमपि वक्तुं शक्यं, अस्मिन्नर्थे अवस्थितेरिति पदस्य
स्वारस्यं नास्तीति । तदा हि 'स्थितेः' इत्येव सूत्रणीयं, 'य आत्मनि
तिष्ठन्' इति मूलश्रुत्यनुरोधात्, लाघवाच्च । 'स्थानादिव्यपदेशाच्च'
इति अत्रोपसर्गाभावाच्च । तस्मादिहोपसर्गसत्वात् ततोऽन्य एव कश्चिदर्थो
विवक्षितः परमात्मनः जीवभावेनावस्थानादित्येवंरूपः । 'सर्वं तं
परादात्' 'इदं सर्वं यदयमात्मा' 'यत्र हि द्वैतमिव भवति' 'यत्र
त्वस्य सर्वमात्मैवाभूत्' इति स्वप्रकरण एव भेददर्शननिन्दाद्युपलम्भादिति
अयमेव पारमार्थिकोऽस्य सूत्रस्यार्थः ॥' (न्या. र. पृ. 346-347)
इति न्यायरक्षामणिः ॥



அந்தராத்மாவாக ப்ரம்ஹமிருப்பதாக 'य आत्मनि
तिष्ठन्' என்று ச்ருதி சொல்லியிருப்பதால் ஜீவசப்
தத்தால் ஆரம்பத்தில் பரமாத்மாவை சொல்லுவது
பொருத்தமானது என்று சொல்லப்படுகிறது என்று
வ்யாக்யானம் செய்கிறார்கள். இவ்விதம் தாத்பர்ய
மானால் **अव** என்னும் உபஸர்கமில்லாமலே
'**स्थितेरिति काशकृत्स्नः**' என்று ஸூத்ரம் செய்வது
உசிதம். இதற்கு மூலமான வேதத்தில் '**य आत्मनि
तिष्ठन्**' என்று உபஸர்கமில்லாமல் கூறப்பட்டிருக்
கிறது. இந்த அர்த்தத்தை சொல்லுமிடத்தில்
'**स्थानादिव्यपदेशाच्च**' (ब्र. सू. १-२-१४) என்ற ஸூத்ரத்தில்
अव உபஸர்கமில்லாமலே காண்கிறது. இங்கு உப
ஸர்கமிருப்பதால் வேறு அர்த்தம் கூறுவதுதான்
பொருத்தமானது. பரமாத்மா ஜீவபாவத்தோடு
இருப்பது என்பதுதான் உண்மையான ஸூத்ரத்
தின் பொருள். மைத்ரேயீ பராம்ஹணத்தில் सर्वं तं
परादात् என்று பேத ஞானத்தை நிந்தித்திருப்பதும்
இதற்கு சான்றாகும் என்று ஸ்ரீ அப்பய்யதீக்ஷிதர்கள்
ந்யாயரக்ஷாமணியில் கூறுகிறார்கள்.

இந்த மூன்று மதங்களுள் முதல் மதத்தில்
ப்ரம்ஹத்தின் விகாரம் ஜீவன் என்று சொல்லுவ
தால் ஞானம் த்யானம் முதலியவைகளால் ஜீவன்
ப்ரம்ஹத்தை அடைந்தால் குடம் முதலியவை
மண்ணை அடைந்ததுபோல தன்னுடைய ப்ரகிருதி
யில் லயத்தை அடைந்ததாக ஆகும். ஆகவே

மோக்ஷம் புருஷார்த்தமாகாது. மேலும் ஸம்ஸார தசையிலேயே, ஜீவனிடம் ப்ரம்ஹத்தின் அபேதமும், பேதமுமிரண்டுமிருக்குமேயானால் மோக்ஷ ஸமயத்திலும் பேதமிருந்தால் 'ब्रह्म वेद ब्रह्मैव भवति' (मु. ३-२-९) என்று ப்ரம்ஹமாக இருக்கிறான் என்பது பொருந்தாது. ப்ரம்ஹத்தின் அபேதமிருப்பதால் பொருந்தும் என்பது சரியல்ல. பந்தமிருக்கும் ஸமயத்திலும் பேதமபேதமிரண்டும் இருப்பதாகச் சொல்லுவதால் மோக்ஷ ஸமயத்தில் விசேஷம் ஒன்றுமில்லை.

ஞானாதிகளால் மோக்ஷகாலத்தில் பேதமில்லையென்றால் ஞானத்தால் பாதிக்கப்பட்ட பேதம், அவித்யாகல்பிதம், ஸம்ஸார தசையிலிருப்பதாக நேரிடும். அப்படிக்கொள்வது மூன்றாவது மதமே.

'स वा एष महानज आत्माऽजरोऽमरोऽमृतोऽभयो ब्रह्म'

(बृ. ६-४-२५)

என்ற ச்ருதி வாக்யம் ஜீவனுக்கு ஒருவிதமான விகாரமுமில்லை, ப்ரம்ஹ ரூபமே அவன் என்று சொல்லுகிறது. ஆகவே அவச்சேதக பேதத்தால் பேதமபேதமிரண்டும் ஸத்யமாக இருக்கிறதென்ற முதல் மதம் பொருத்தமற்றது. ப்ரம்ஹத்தினிடமிருந்து நெருப்புத்துளிகள்போல ஜீவர்கள் கிளம்பி வந்தன வென்று உபாதிகளின் உத்பத்தியைக் கொண்டு சொல்லப்பட்டது.

வாஸ்தவமாகவே' ப்ரம்ஹத்தைக் காட்டிலும்



வேறான ஜீவன் மோக்ஷ தசையில் ப்ரம்ஹாபேதத்தை அடைகிறான். ஆகவே காலபேதத்தால் பேதமபேதமுமிருக்கிறது என்ற இரண்டாவது மதமும் பொருந்தாது. குடமும் வஸ்திரமும் ஒன்றுக்கொன்று வாஸ்தவத்தில் வேறானவை. அவையிரண்டும் ஒரு ஸமயமும் ஒன்றாவதில்லை. இது விபரம் —

'परमात्मात्मनोर्योगः परमार्थ इतीर्यते ।
मिथ्यैतदन्यद्द्रव्यं हि नैति तद्द्रव्यतां यतः ॥'

என்ற விஷ்ணுபுராண வாக்யம் ஒரு த்ரவ்யம் மற்றொரு த்ரவ்யமாக ஆகாதபடியால் முன்பு வெவ்வேறாக இருந்த ஜீவனுக்கும் ப்ரம்ஹத்திற்கும் அபேதம் என்னும் ஸம்பந்தம் வருகிறது என்பது பொய், (சரியல்ல) என்று ஸ்பஷ்டமாகக் கூறுகிறது.

ஸமுத்திரத்திற்கு வேறான நதிகள் ஸமுத்திரத்தோடு ஒன்றாவதுபோல ஞானியான ஜீவன் நாமரூபங்களிலிருந்து விடுபட்டு பரப்ரம்ஹத்தை அடைகிறான் என்று வேதத்தில் கூறியிருப்பதால் வேறான ஜீவன் ப்ரம்ஹத்தோடு ஒன்றாகலாமென்று கூறுவதும் சரியல்ல. 'यथा नद्यः' என்ற வாக்யத்தில் நதி என்ற பதத்திற்கு ப்ரவாஹமாக ஓடும் ஸந்நிவேசம் (संस्थान) என்று பொருள்கொண்டால் அது ஸமுத்ர ஸம்பந்தத்தால் நாசத்தை அடைவதால் ஒன்றாக ஆகிறது என்பது பொருத்தமற்றது. ஓடும் ஜலங்

களின் பரமாணுக்கள் என்று பொருள்கொண்டால் அவைகள் ஸமுத்ரத்தோடு கலந்த ஸமயத்திலும் ஸமுத்திர ஜல பரமாணுக்களுக்கு வேருகவே இருக்கின்றன. அவைகளுடன் ஒன்ருவதில்லை. ஆகையால் ஸமுத்திரத்தை அடைந்தால் நதிகளுக்கு கங்கை முதலிய நாமமும், உருவமும் போய்விடுவது போல, பரமாத்மாவை அடைந்தால் ஜீவனுக்கு நாமமும் ரூபமும் போய்விடுகிறது என்பதே அந்த ச்ருதி வாக்யத்தின் பொருளாகக்கொள்ளவேண்டும்.

ஜீவன் ப்ரம்ஹத்தைக்காட்டிலும் பரமார்த்தமாகவே வேருனவன் என்று கொண்டால், ப்ரம்ஹம் இரண்டாவது வஸ்து இல்லாதது. எல்லாம் ப்ரம்ஹமே. அதைத்தவிற வேறு பார்ப்பவனுன ஜீவனில்லை.

'एकमेवाद्वितीयम्' (छा. ६-२-१) 'ब्रह्मैवेदं सर्वं' 'नान्योऽतोऽस्ति द्रष्टा' (बृ. ५-७-२३) 'नान्यदतोऽस्ति द्रष्टृ' (बृ. ५-८-११)

முதலிய வாக்யங்களின் விரோதமேற்படும். மேலும் ப்ரம்ஹத்தைவிட வேருக ஜீவனைத் தெரிந்துகொள்பவன் பசுபோல அக்ஞானீ.

'अन्योऽसावन्योऽहमस्मीति न स वेद यथा पशुः' (बृ. ३-४-१०)

பேத ஞானமுள்ளவன் ஜனன மரண ப்ரவாஹத்திலேயேயிருப்பான்.



'मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति' (बृ. ६-४-१९)

என்று பேத ஞானியை நிந்தனை செய்யும் வாக்யங்களும் பல காணப்படுகின்றன. ஆகையால் பேதம் பரமார்த்தமானதல்ல. ஆகவே இரண்டாவது மதமும் பொருத்தமற்றது.

ஜீவன் பரமார்த்தமாக ப்ரம்ஹமே. பேதம் அவித்யையால் கல்பிக்கப்பட்டது. ஒரு ஸூர்யன் பல ஜலங்களில் வெவ்வேறு ஸூர்யனுகத் தோன்றுவதுபோல் ஒரே ப்ரம்ஹம் பல உபாதிகளில் வெவ்வேருகத் தோன்றுகிறது. ப்ரத்யக்ஷ ஸித்தமானது பேதம். அபேதம் நம் அறிவிற்கு கோசரமில்லை. அதனறிவே மோக்ஷ ஸாதனம்.

'तत्र को मोहः कः शोकः एकत्वमनुपश्यतः' (ईशा. ७)
'तदात्मानमेवावेदहं ब्रह्मास्मीति तस्मात्तत्सर्वमभवत्'
(बृ. ३-४-१०)

என்ற வாக்யங்கள் அபேத ஞானமே மோக்ஷ ஸாதனமென்று கூறுகின்றன. ப்ரமாணமான வேதங்கள் ப்ரயோஜன மற்றதாயுள்ள நாம் அறிந்ததையே உபதேசிக்க ப்ரவ்ருத்திக்கவில்லை. ஆகவே, ப்ரத்யக்ஷ ஸித்தமான ஆவித்யகமான (கல்பிதமான) பேதத்தை அனுவாதம் செய்து புருஷார்த்தத்தைக் கொடுக்கும் அபேதத்தைத் தாத்பர்யத்தோடு வேதங்கள் நிரூபணம் செய்கின்றன. அந்தர்யாமி ப்ராம்ஹணத்தில் 'यो विज्ञाने

तिष्ठन्' என்று ஜீவனை வேருக அந்தர்யாமிக்கு அதீனமாக சொல்லி முடிவில் 'नान्योऽतोऽस्ति द्रष्टा' என்று ஜீவனிடம் பேதத்தை நிஷேதம் செய்து அபேதத்தைச் சொல்லுகிறது. ஆகவே அபேதம் பாரமார்த்திகம். பேதம் அவித்யா கல்பிதம். பந்த காலத்தில் வாஸ்தவாபேதத்தோடு கல்பிதபேதமுமிருக்கிறது. ஞானம் வந்த பிறகு கல்பிதபேதமில்லை. காலுஷ்யம் ஒன்றுமில்லை என்ற வ்யவஸ்தை சரியானது என்ற மூன்ருவது மதமே வேதங்களையும், அதைத்தழுவிய ஸ்மிருதிகளையுமனுஸரித்திருப்பதால் ஸித்தாந்தமதமாகும்.

இவ்விதமாகவே விஷ்ணுபுராணம் பேதாபேதங்களின் வ்யவஸ்தையைச் செய்திருக்கிறது.

'तस्यात्मपरदेहेषु सतोऽप्येकमयं हि तत् ।
विज्ञानं परमार्थोऽसौ द्वैतिनोऽतथ्यदर्शिनः ॥
सितनीलादिभेदेन यथैकं दृश्यते नभः ।
भ्रान्तिदृष्टिभिरात्मापि तथैकस्सन् पृथक् पृथक् ॥
एकः समस्तं यदिहास्ति किञ्चित् तदच्युतो नास्ति परं ततोऽन्यत् ।
सोऽहं स च त्वं स च सर्वमेतत् आत्मस्वरूपं त्यज भेदमोहम् ॥
इतीरितस्तेन स राजवर्यस्तत्याज भेदं परमार्थदृष्टिः ।
विभेदजनकेऽज्ञाने नाशमात्यन्तिकं गते ।
आत्मनो ब्रह्मणो भेदमसन्तं कः करिष्यति ॥'



என்ற விஷ்ணுபுராண வாக்யங்கள் ஸ்வாரஸ்யத்துடன் பேதம் ஆவித்யகம், அபேதமே பாரமார்த்திகம் என்று கூறுகின்றன. மூன்ருவது அத்யாயத்தில்,

'उभयव्यपदेशात्त्वहिकुण्डलवत्' (ब्र. सू. ३-२-२७)
'प्रकाशाश्रयवद्वा तेजस्त्वात्' (ब्र. सू. ३-२-२८)

என்னும் ஸூத்ரங்களால் ஜீவனுக்கு ப்ரம்ஹத்தோடு பேதாபேத நிருபணம் செய்யப்பட்டிருக்கிறது. பாம்பு ஒன்று அது சுருண்டு குண்டலமாயுமிருக்கிறது. நீண்டு (आभोग) விஸ்தாரமாயுமிருக்கிறது. குண்டலமும் ஆபோகமும் பேதமுள்ளவை.

'यथाऽहिरित्यभेदः, कुण्डलाभोगप्रांशुत्वादीनीति तु भेदः, एवमिहापि'

என்று பாஷ்யம். ஆகவே பேதத்திற்கு விஷயம் வேறு, அபேதத்திற்கு விஷயம் வேறு. ஆகையால் பேதத்திற்கும், அபேதத்திற்கும் விரோதமில்லையென்பது முதல் ஸூத்ரத்தின் கருத்து.

ஸூர்யன் என்னும் த்ரவ்யத்தின் குணம் ப்ரகாசம். இரண்டும் எப்பொழுதும் சேர்ந்தே ப்ரகாசிக்கின்றன. ஆகையால் ஸூர்யனும் அதன் ப்ரகாசமும் பரஸ்பரம் பேதமும் அபேதமும் உடையவை. அதுபோல ஆகமப்ரமாணத்தால் ஜீவனும் ப்ரம்ஹமும் பேதாபேதமுடையதாகத் தெரிவதால் பரஸ்பரம் பேதமும் அபேதமுமிருக்

கிறது. விஷய பேதமில்லாமலே இரண்டையும் ஒத்துக்கொள்ளலாமென்பது இரண்டாவது ஸூத்ரத்தின் கருத்து.

முதல் மதம் பொருந்தாது. விஷயபேதத்தால் பேதத்தையும் அபேதத்தையும் ஒத்துக்கொள்வது பேதாபேத வாதமல்ல. ஏனெனில் அத்யந்தம் பேதத்தை ஒத்துக்கொள்பவர்களும் பாம்பு ஒன்று, குண்டலம் என்பதும், ஆபோகம் என்பதும் வேறு என்று சொல்லுகிறார்கள். ஆகவே ஒரு வஸ்துவிற்கு பாம்பு என்னும் ஆகாரத்தாலபேதமும், குண்டலம் ஆபோகம் முதலிய ஆகாரத்தால் பேதமும் சொல்ல வேண்டும். அந்த ஆகாரங்கள் வஸ்துவைக் காட்டிலும் வேறில்லையென்றால் விஷயபேதம் என்பதற்கு ஒருவித அர்த்தமுமில்லை. ஆகவே ஆகாரங்கள் வஸ்துவைவிட வேறானவைகள் என்று கொள்ளவேண்டும். ஆகாரங்கள் (अहित्वं, कुण्डलत्वं) வேறானதாலும் ஒன்றானதாலும் அவைகளைவிட வேறான வஸ்து ஒன்றாகவும் வேறாகவுமிருக்கிறது என்பது பொருந்தாது. ஒரு வஸ்துவிற்கு வெவ் வேறான இரண்டு ஆகாரங்கள் (अहित्वं, कुण्डलत्वं) இருக்கின்றன என்று கொள்வதே உசிதமானது. அவ்வித ஆகாரங்களால் வஸ்துவிற்கே பேதமும் அபேதமுமிருக்கிறது என்பது பொருத்தமற்றது.

இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. ஸூர்ய னும் அதன் ப்ரகாச குணமும் சேர்ந்தே எப்பொழு தும் அனுபவிக்கப்படுவதால் இவ்விரண்டிற்கும்



பேதம் அபேதம் இரண்டும் வாஸ்தவமென்பது பொருத்தமற்றது. பேதம் என்பதும், அபேதம் என்பதும் ஒன்றுக்கொன்று விருத்தமானவை. விருத்தமானாலும் எப்பொழுதும் சேர்ந்து தோன்று வதால் விரோதமற்றது என்று ஒத்துக்கொண்டால் உலகில் ஓரிடத்திலும் விரோதமே இருக்கவேண்டிய தவச்யமில்லை. சரீரத்தில் ஆத்ம புத்தி எப்பொழுது மிருப்பதால் தேஹாத்மபாவமும் ஸ்வாபாவிகம் (பாரமார்த்திகம்) என்று சொல்ல நேரிடும். [1] ஆகையால் ப்ரம்ஹத்தின் அபேதமே பாரமார்த் திகம். பேதம் அவித்யா (உபாதி) கல்பிதம் என்று

---

1. 'यस्य मतं वस्तुनोऽहित्वेनाभेदः, कुण्डलत्वेन भेद इति, स एवं ब्रुवाणः प्रष्टव्यो जायते किमहित्वकुण्डलत्वे वस्तुनो भिन्ने, उताभिन्ने इति। यदि भिन्ने, अहित्वकुण्डलत्वे भिन्ने इति वक्तव्यं, न तु वस्तुनस्ताभ्यां भेदाभेदौ। न ह्यन्यभेदाभेदाभ्यामन्यद्भिन्नमभिन्नं वा भवितुमर्हति, अतिप्रसङ्गात्। अथ वस्तुनो न भिद्येते अहित्वकुण्डलत्वे, तथा सति को भेदाभेदयोर्विषयभेदः तयोर्वस्तुनोऽनन्यत्वेनाभेदात्॥

न चैकविषयत्वेऽपि सदानुभूयमानत्वाद्भेदाभेदयोरविरोधः, स्वरूप-विरुद्धयोरप्यविरोधे क्व नाम विरोधो व्यवतिष्ठेत। न च सदानुभूयमानं विचारासहं भाविकं भवितुमर्हति, देहात्मभावस्यापि सर्वदानुभूयमानस्य भाविकत्वप्रसङ्गात्। प्रपञ्चितं चैतदस्माभिः प्रथमसूत्रे इति नेह प्रपञ्चितम्। तस्मादनाद्यविद्याविक्रीडितमेवैकस्यात्मनो जीवभावभेदो न भाविकः।' (N. S. सू. भा. पृ. 722-723) इति भामती॥

கொள்ளுவதே உசிதமானது. இந்த விபரத்தை 'पूर्ववद्वा' (ब्र. सू. ३-२-२९) என்ற ஸூத்திரத்தில் நிருபணம் செய்கிறுர்.

नान्योऽतोऽस्ति द्रष्टा என்று ஸ்பஷ்டமாக ப்ரம்ஹத்தைவிட வேறுன த்ரஷ்டா இல்லை என்று பேதம் நிஷேதம் செய்யப்பட்டிருக்கிறது.

ஆகாசம், ஆகாசத்திலுள்ள ஸூர்யன் முதலியவை ஒன்றுயினும் குடம், ஜலம் முதலிய உபாதியால் வெவ்வேருகத் தோன்றுவதுபோல ஒரே ப்ரம்ஹம் பல உபாதிகளால் வெவ்வேருகத் தோன்றுகிறது. அபேதமே பாரமார்த்திகம். பேதம் கல்பிதம். வேதாந்தங்கள் அடிக்கடி பலவிதமாக ஜீவனுக்கும் ப்ரம்ஹத்திற்கும் அபேதத்தையே தாத்பர்யத்தோடு நிருபணம் செய்கின்றன. तत्वमसि என்று 9 தடவைகள் உபதேசம் செய்யப்பட்டு இருக்கிறது.

'अयमात्मा ब्रह्म सर्वानुभूरित्यनुशासनम्' (बृ. ४-५-१९)

என்று ஜீவனே ப்ரம்ஹம் என்பது எல்லா உபநிஷத்துக்களின் உபதேசம் என்று கூறப்பட்டிருக்கிறது. பேதம் அவித்யாகல்பிதமானதால் ப்ரம்ஹஞானத்தால் அவித்யை அழிந்தால் ப்ரம்ஹமாக ஆகிவிடுகிறுன்.

'ब्रह्म वेद ब्रह्मैव भवति' (मु. ३-२-९)





என்றும், ப்ரம்ஹமாக இருந்துகொண்டே ப்ரம்ஹமாக ஆகிறுன்,

'ब्रह्मैव सन् ब्रह्माप्येति' (बृ. ६-४-६)

என்றும், சொல்லும் வேதங்களும் அபேதம் ஸத்யம், பேதம் கல்பிதம், (அநிர்வசனீயம்) என்பதை எடுத்துக்காட்டுகின்றன. இந்த விபரங்கள்,

'प्रतिषेधाच्च' (ब्र. सू. ३-२-३०) 'प्रकाशादिवच्चावैशेष्यम् प्रकाशश्च कर्मण्यभ्यासात्' (ब्र. सू. ३-२-२५) 'अतोऽनन्तेन तथा हि लिङ्गम्' (ब्र. सू. ३-२-२६)

என்ற ஸூத்ரங்களில் நிருபணம் செய்யப்பட்டிருக்கின்றன. மேலும்,

'सुषुप्त्युत्क्रान्त्योर्भेदेन' (ब्र. सू. १-३-४२) पत्यादिशब्देभ्यः (ब्र. सू. १-३-४३)

என்ற ஸூத்ரங்களில்,

'योऽयं विज्ञानमयः प्राणेषु'

என்ற வாக்யத்தால் ஜீவனை அனுவாதம் செய்து,

'सर्वस्य वशी सर्वस्येशानः न साधुना कर्मणा भूयान् नो एवासाधुना कनीयान् (बृ. ६-४-२२)

என்ற வாக்யத்தால் ஸம்ஸார பந்தமில்லாத ப்ரம்ஹமாக உபதேசம் செய்யப்பட்டிருக்கிறது, என்று

பாதராயண மஹரிஷி நிர்ணயம் செய்திருக்கிறார்.[1]

மேலும்,

'शब्दादेव प्रमितः' (१-३-२४) என்ற

ஸூத்திரத்தில் ஜீவப்ரம்ஹாபேதம் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது.

'अंगुष्ठमात्रः पुरुषो ज्योतिरिवाधूमकः ।
ईशानो भूतभव्यस्य स एवाद्य स उ श्वः । एतद्वै तत् ॥'

என்ற கடோபநிஷத்தின் (4-13) மந்திரம் '**तत्त्वमसि**' என்ற வாக்யம் போலவே ஜீவனை ப்ரம்ஹமென்று உபதேசிக்கிறது. அவரவர்களுடைய கட்டைவிரல் அளவுதான் அவரவர்களின் ஹ்ருதயமிருக்கிறது. அதிலிருப்பதால் ஜீவன் அங்குஷ்டபரிமாணன் (अंगुष्ठमात्रः) என்று சொல்லப்படுகிறான். மஹாபாரதத்திலும்,

'अथ सत्यवतः कायात्पाशबद्धं वशङ्गतम् ।
अंगुष्ठमात्रं पुरुषं निश्चकर्ष यमो बलात्' ॥

என்றச்லோகம் ஜீவனை அங்குஷ்டமாத்ர பதத்தால் குறிப்பிடுகிறது.

---

1. 'योऽयं विज्ञानमयः प्राणेषु संसारी लक्ष्यते, स वा एष महानज आत्मा परमेश्वर एवास्माभिः प्रतिपादित इत्यर्थः' (N. S. ब्र. सू. भा. पृ. 369) इति भाष्यम् ॥



புகையில்லாத சுத்தமான ஜ்யோதிஸ் போலுள்ள ஜீவன் எல்லாவற்றிற்கும் நியந்தாவான ப்ரம்ஹமே. அவனே மூன்று காலத்திலுமுள்ளவன் என்பது மேலே கூறிய கடோபநிஷத்து மந்திரத்தின் பொருள். இதற்கு மேல்பாகத்திலுள்ள,

अंगुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा सदा जनानां हृदये संनिविष्टः ।
तं स्वाच्छरीरात्प्रवृहेन्मुञ्जादिवेषीकां धैर्येण तं विद्याच्छुक्र-
मम्रृतमिति ॥' (कठ. ६-१७)

என்ற மந்திரம் எல்லாருடைய ஹ்ருதயத்திலும் அங்குஷ்டபரிமாணமுள்ள ஜீவனிருக்கிறான். அவன் ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங்களோடு கலந்திருப்பதால் அவனை தன்னுடைய ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங்களிட மிருந்து பிரித்து எடுத்துத் தெரிந்துகொள்ள வேண்டும். அவ்விதம் பிரித்தெடுத்த ஜீவனை சுத்தமான ப்ரம்ஹமென்று அறிந்துகொள்ள வேண்டுமென்று நிரூபணம் செய்கிறது. அந்த அர்த்தத்தையே மேலே கூறிய மந்திரமும் சொல்லு கிறது. 'अंगुष्ठमात्रः पुरुषः' என்ற பதங்களால் ஜீவன் அனுவாதம் செய்யப்படுகிறான். ज्योतिरिवाधूमकः என்பதினால் சரீரங்களிலிருந்து பிரித்தறிவு (विवेचनं) கூறப்படுகிறது. ईशानो भूतभव्यस्य என்பதினால் பரமேச்வரத்தன்மை விதிக்கப்படுகிறது. இவ்விதம் ஜீவனுக்கும் ப்ரம்ஹத்திற்குமைக்யம் சொல்லிய பிறகு, ஜீவன் அல்பஞானமுள்ளவன், ஈச்வரன் எல்லாமறிந்தவன், ஸர்வசக்தி வாய்ந்தவன்.

இவ்விதம் விருத்தமான தர்மங்கள் ஓரிடத்திலிருக்க முடியாதபடியால் ஐக்யம் பொருந்தாது என்ற ஸந்தேஹம் உண்டாகிறது. அதற்காக அல்பஜ்ஞத்வம், ஸர்வஜ்ஞத்வம் முதலிய தர்மங்கள் வெவ்வேறிடத்திலிருக்கின்றனவென்று நினைப்பவர்கள் ஸம்ஸார பந்தத்தை விடுவதில்லை,

'यथोदकं दुर्गे वृष्टं पर्वतेषु विधावति ।
एवं धर्मान् पृथक् पश्यन् तानेवानुविधावति ॥' (कठ. ४-१४)

என்று சொல்லி, ஜீவனையும் ஈச்வரனையும் சோதனை செய்தால் சுத்தமான ஜீவனுக்கு சுத்த ப்ரம்ஹ பாவம் பொருத்தமானது என்பதை சுத்தமான ஜலத்தில் சுத்த ஜலத்தை விட்டால் சுத்தமாகவேயிருப்பதுபோல, ஞானியின் ஆத்மா இருக்கும்,

'यथोदकं शुद्धे शुद्धमासिक्तं तादृगेव भवति ।
एवं मुनेर्विजानत आत्मा भवति गौतम ॥' (कठ. ४-१५)

என்று, ஐக்யத்தை நிரூபணம் செய்துவிட்டு, உபநிஷத்தின் கடைசியில் சரீரங்களிலிருந்து பிரித்தறிந்த சுத்தமான ஜீவனே ப்ரம்ஹம் என்று ஸாரார்த்தம் சொல்லப்பட்டிருக்கிறது.[1]

---

1. 'अंगुष्ठमन्त्रेण जीवब्रह्मैक्यप्रतिपादनानन्तरं विरुद्धधर्मवत्तो-स्तयोः कथमैक्यं संभवतीत्याशङ्कायां; 'यथोदकं दुर्गे वृष्टं पर्वतेषु विधावति । एवं धर्मान् पृथक् पश्यन् तानेवानुविधावति' इति मन्त्रेण जीवे ब्रह्मणि च पृथक् व्यवस्थिताः धर्माः अभेदविरोधिनः सन्तीति



அங்குஷ்டமாத்ரன் என்ற ஜீவன் ईशान என்ற பதத்தால் சொல்லப்படுவதால் ப்ரம்ஹமே என்பது 'शब्दादेव प्रमितः' (ब्र. सू. १-३-२४) என்ற ஸூத்ரத்தின் பொருள். இந்த விபரம் அந்த ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் காணப்படுகிறது.[1]

மேலும் நான்காவது அத்யாயத்தில் ப்ரம்ஹ ஸாக்ஷாத்காரம் வரையில் ச்ரவணாதிகளை ஆவிருத்தி செய்துகொண்டே இருக்கவேண்டும் என்று நிரூபணம் செய்தவுடன் 'ப்ரம்ஹம் நான்' என்ற ஸாக்ஷாத்காரம் வருகிறதா, என்னுடையது என்று வருகிறதா என்ற ஸந்தேஹத்தை நிவிருத்தி செய்ய

---

पश्यतस्तथैव पृथग्धर्मवत्तया संसार एवानुवर्तते इति दोषमुक्त्वा 'यथोदकं शुद्धे शुद्धमासिक्तं तादृगेव भवति। एवं मुनेर्विजानत आत्मा भवति गौतम ॥' इति मन्त्रेण शुद्धयोरेवैक्यमिति तयोरैक्य-मुपपादयामास ।' (न्या. र. पृ. 305) इति न्यायरक्षामणिः ॥

1. 'यदप्युक्तं परिमाणोपदेशात् स्मृतेश्च संसार्येवायमंगुष्ठमात्रः प्रत्येतव्य इति। तत्प्रत्युच्यते। 'स आत्मा तत्त्वमसि' इत्यादिवत् संसारिण एव सतः अंगुष्ठमात्रस्य ब्रह्मत्वमिदमुपदिश्यते इति। द्विरूपा हि वेदान्तवाक्यानां प्रवृत्तिः, क्वचित्परमात्मस्वरूपनिरूपणपरा ; क्वचि-द्विज्ञानात्मनः परमात्मैकत्वोपदेशपरा। तदत्र विज्ञानात्मनः परमात्म-नैकत्वमुपदिश्यते, नांगुष्ठमात्रत्वं कस्य चित् ॥' (N. S. ब्र. सू. भा. पृ. 316-317) इति भाष्यम् ॥

'आत्मेति तूपगच्छन्ति ग्राहयन्ति च' (ब्र. सू. ४-१-३) என்ற ஸூத்ரத்தில் अहं ब्रह्मास्मि என்று ஸாக்ஷாத்காரம் வரும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

'तत्त्वमसि' முதலிய வாக்யங்கள் ஜீவப்ரம்ஹா பேதத்தை போதிக்கமுடியாது. அபேதம், நான் ப்ரம்ஹமில்லை என்ற ப்ரத்யக்ஷத்திற்கு விருத்தமாயிருக்கிறது. ஆகையால் ஸாலக்ராமத்தை விஷ்ணுவாக த்யானம் செய்வதுபோல ஜீவனை ப்ரம்ஹமாக உபாஸனமே அந்த வாக்யங்களால் போதிக்கப்படுகிறது என்ற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக அந்த ஸூத்ரம் ப்ரவிருத்திக்கிறது. உபாஸனையை விதிக்கும் வாக்யங்கள் ஒரு தடவைதான் அபேதத்தை சொல்லுகின்றன.

'मनो ब्रह्मेत्युपासीत' छा. (३-१८-१), 'आदित्यो ब्रह्मेत्यादेशः' (छा ३-१९-१)

என்று வாக்யங்கள் காணப்படுகின்றன. ஜாபால ச்ருதியில் ப்ரம்ஹத்தைச் சொல்லும்பொழுது,

'त्वं वा अहमस्मि भगवो देवते, अहं वै त्वमसि देवते'

என்று, 'ஹே ப்ரம்ஹமே, நான் உன் ஸ்வரூபமாக இருக்கிறேன், நீ என் ஸ்வரூபமாயிருக்கிறாய்' என்று மிகவும் த்ருடமாக ஐக்யம் சொல்லப்பட்டிருக்கிறது. 'तत्त्वमसि' என்ற உபதேசம் 9 தடவைகள் ஐக்யத்தைக் கூறுகின்றன. ஆத்மா என்ற பதம் ப்ரத்யகாத்மாவை ரூடி சக்தியால் போதிக்கிறது. ஆத்ம சப்தத்தால் ப்ரம்ஹத்தை பல வாக்யங்கள் தாத்பர்யத்தோடு போதிக்கின்றன.



'अहं ब्रह्मास्मि' (बृ. ३-४-१०) 'एष त आत्मा-ऽन्तर्याम्यमृतः' (बृ. ५-७-३) 'एष त आत्मा सर्वान्तरः' (५-५-१) 'तत्सत्यं स आत्मा ।' (छा. ६-८-६)

இவ்விதம் अहं ब्रह्मास्मि என்ற ஸாக்ஷாத்காரம் வரும் வரையில்தான் ஸம்ஸாரபந்தம். ஸாக்ஷாத்காரம் வந்த பிறகு ஒருவித வ்யவஹாரமுமில்லை.

'यत्र त्वस्य सर्वमात्मैवाभूत् तत्केन कं पश्येत् ।' (बृ. ६-५-१५)

அத்வைத ஸாக்ஷாத்காரமே சாஸ்த்ர த்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. தேவலோகம் சென்று இந்திரனிடம் சிஷ்யனாக உபதேசம் கேட்கவந்த ப்ரதர்தனன் என்ற அரசனைப் பார்த்து இந்திரன் 'मामुपास्व' என்னை அறிந்துகொள் என்று உபதேசித்தான். அங்கு 'माम्' என்ற பதத்தால் இந்திர ஜீவனை குறிப்பிடவில்லை. சாஸ்திரத்தால் இந்திரன் தன்னை ப்ரம்ஹம் என்று ப்ரத்யக்ஷமாக அறிந்தபடியால், அந்த த்ருஷ்டியால் ப்ரம்ஹமாகவே எண்ணி உபதேசம் செய்தான். இவ்விதம் வேதத்திலும் வாமதேவ மஹரிஷிக்கு கர்பத்திலிருக்கும்பொழுதே ப்ரம்ஹ ஸாக்ஷாத்காரம் வந்தபடியால் ப்ரம்ஹாத்மபாவம் வந்த நிலையில் 'अहं मनुरभवं सूर्यश्च' நானே எல்லாமாயிருந்தேன் என்று அவர் அறிந்ததாக நிரூபணம் செய்யப்படுகிறது. இந்த விபரம்

'शास्त्रदृष्ट्या तूपदेशो वामदेववत्' (ब्र. सू. १-१-३०)

என்ற ஸூத்ரத்தில் கூறப்படுகிறது.

இதுவரையில் ஜீவனுக்கும் ப்ரம்ஹத்துக்கும் ஐக்யம் சாஸ்திரங்களில் விசதமாகக் கூறப்பட்டிருக்கிறது என்பதை சிந்தித்தோம். இனி முக்தியைச் சிந்திப்போம் :—

ஆத்மஸாக்ஷாத்காரமே முக்தி ஸாதனம் என்று சொன்னோம். அதை அடைய குருவினிடம் வேதாந்த வாக்யார்த்த விசாரம் செய்து அதில் வரும் ஸந்தேஹங்களை நிவிருத்தி செய்ய யுக்திகளையும் உபயோகப்படுத்தி விபரீத பாவனை வெகு நாளாக இருந்துவருவதால் அதை நீக்க த்யானம் செய்யவேண்டும். இவைகளை ஆவிருத்தி செய்துகொண்டேயிருக்கவேண்டும். ஸாக்ஷாத்காரம் வருவதற்கு ப்ரதிபந்தகமான கர்மாக்களில்லாத வரையில் ச்ரவணம் மனனம் முதலிய ஸாதனங்களை அனுஷ்டிக்கும் ஜன்மத்திலேயே ஸாக்ஷாத்காரம் வந்துவிடும். ப்ரதிபந்தகமிருந்தால் அதன் பலனை அனுபவித்து அது நாசமடைந்த பிறகு வேறு ஜன்மத்தில்தான் வரும். இந்தக்கருத்தை

‘ऐहिकमप्यप्रस्तुतप्रतिबन्धे तद्दर्शनात्’ (ब्र. सू. ३-४-५१)

என்ற ஸூத்ரத்தில் வெளியிட்டிருக்கிறார்.

‘अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम्’ (भ. गी. ६-४५)

என்ற ஸ்மிருதி வாக்யமும் இதற்கு ப்ரமாணமாகும்.

ஸாக்ஷாத்காரம் வந்தால் உடனேயே அஞ்ஞானம் போய்விடும். ஒருவித தாமதமுமிராது. வெளிச்சம் வந்தவுடனேயே இருட்டு அகன்று



விடுகிறது. தாமதமெதுவுமில்லை. ஆவரணம் நீங்கிப்போனால் ஆத்மா ஸ்வயம்ப்ரகாசமானதால் பரிபூர்ணானந்தம் ப்ரகாசிக்கிறது. அவித்யா நிவிருத்தியைத்தவிர வேறு உண்டாக வேண்டியது ஒன்றுமில்லை. அவித்யா நிவிருத்தியென்பது பரமானந்தமான ஆத்மஸ்வரூபமே. பரிபூர்ணமான ஆனந்தமாக இருப்பது என்ற முக்தி ஸித்திக்கிறது. ஸாக்ஷாத்காரம் வரவேண்டி ஸாதனங்களை அனுஷ்டித்து வரும்பொழுது ப்ராரப்த கர்ம ப்ரதிபந்தமிருந்தால் அதன் பலனை அனுபவித்த பிறகு ஜன்மாந்தரத்தில் ஸாக்ஷாத்காரம் வரும். அது போல, ஸாக்ஷாத்காரம் வந்தபிறகு முக்தி வருவதற்கு ப்ராரப்தகர்மம் தடங்கலாயிருக்காது. ப்ராரப்தகர்ம பலனை அனுபவித்துக்கொண்டே முக்தியை பரிபூர்ணனந்தத்தை அனுபவிக்கலாம். அவ்விதமாக ப்ரம்ஹவித்துக்களின் அனுபவமிருக்கிறது. அவ்விதம் ப்ரம்ஹவித்துக்கள் அனுபவிப்பதாக வாஸிஷ்டம் முதலிய ஸ்மிருதிகள் கூறுகின்றன.

‘परव्यसनिनी नारी व्यग्रापि गृहकर्मणि ।
तदेवास्वादयत्यन्तः परसङ्गरसायनम् ॥

एवं तत्त्वे परे शुद्धे धीरो विश्रान्तिमागतः ।
तदेवास्वादयत्यन्तः बहिर्व्यवहरन्नपि ॥’

இந்த விபரம்

'एवं मुक्तिफलानियमस्तदवस्थावधृतेस्तदवस्थावधृतेः' (ब्र. सू. ३-४-५२)

என்ற ஸூத்ரத்தில் கூறப்படுகிறது. ப்ராரப்த கர்மாவின் ப்ரதிபந்தமில்லாதபோனுல் ஸாக்ஷாத்கார ஸாதனங்கள் ஸாக்ஷாத்காரத்தை உண்டு பண்ணுகின்றன என்கிற நியமம் முந்திய

'ऐहिकमप्यप्रस्तुतप्रतिबन्धे तद्दर्शनात्' (ब्र. सू. ३-४-५१)

என்னும் ஸூத்ரத்தில் கூறப்பட்டது. அதுபோல ஸாக்ஷாத்காரத்தால் முக்தியென்னும் பலன் வரும் விஷயத்தில் ப்ராரப்த கர்ம ப்ரதிபந்தம் இல்லாத போனுல் என்ற நியமம் இல்லை. ஏனெனில் ஞானம் வந்தவுடனேயே முக்தியிருப்பதாக ப்ரம்ஹவித்துக்களின் அனுபவமிருக்கிறது என்று அந்த ஸூத்ரத்தின் பொருள் என்று ஸ்ரீ ப்ரம்ஹாநந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள் கூறுகிருர்கள்.[1]

ஸாக்ஷாத்காரம் வந்தவனுக்கு ஞானத்தால் ப்ராரப்த கர்மாவைத்தவிற வேறு ஸஞ்சித

---

1. 'यथा विद्यायां नियमः उक्तः, तथा मुक्तौ तत्फले न नियमः । विद्योदये सति अविद्यानिवृत्तिपरमानन्दरूपमुक्तेः अवस्थायाः अवस्थानस्य अवधृतेः विदुषामानुभविकत्वात् । तथा च प्रारब्धकर्म भुञ्जानेनैव मुक्तेरनुभूयमानत्वात्, न तत्र तस्य प्रतिबन्धकत्वं कल्प्यते । अपि तु अनुभूयमानभोगसाधनस्याविद्याकार्यस्य निवृत्तिं प्रति तादृशप्रारब्धकर्मणः प्रतिबन्धकत्वमिति वक्ष्यते ।' इति वेदान्तसूत्रमुक्तावलिः ॥



கர்மாக்கள் நாசமடைகின்றன. அப்பொழுது செய்யப்படும் கார்யங்களாலுண்டாகும் தர்மா தர்மங்களும் ஒட்டுவதில்லை. இவ்விதம் அவித்யா லேசத்தால் ப்ராரப்த கர்மபலனை அனுபவிப்பதால் அந்த கர்மா முடிந்து சரீரம் விழுந்த பிறகு விதேஹ கைவல்யமடைகின்ருன். ஞானியின் ப்ராணன்கள் லயத்தை அடைகின்றன. உத்க்ராந்தியோ கமனமோ கிடையாது.

'न तस्य प्राणाः उत्क्रामन्ति' (बृ. ६-४-६)

'अत्रैव समवनीयन्ते' (बृ. ५-२-११)

என்று வேதம் கூறுகிறது. நிர்குணமான பரப்ரம்ஹ ஸாக்ஷாத்காரமுள்ள வித்வானுக்கு கமநம் (गति) கிடையாது என்பது,

'गतेरर्थवत्त्वमुभयथाऽन्यथा हि विरोधः' (ब्र. सू. ३-३-२९)

என்ற ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. अर्थः என்ற பதத்திற்கு நிவிருத்தி என்ற பொருள் உண்டு. 'मशकार्थो धूमः' என்ற லௌகிக ப்ரயோகம் கொசு நிவிருத்திக்காக புகைபோடுகிருேம் என்ற பொருளை விளக்குகிறது. வ்யாகரண சாஸ்திரத்தில் 'अश्वर्थस्य न' என்ற வார்த்திகத்தில் போஜன நிவிருத்தியை போதிக்கும் பதம் என்பதே 'अश्वर्थः' என்ற பதத்தின் பொருள். அதுபோல, இந்த ஸூத்திரத்திலும் கொள்ளவேண்டும். ஆகவே நிர்குண ப்ரம்ஹ ஞானிக்கு கமன நிவிருத்தி கொள்ளவேண்டும். இல்லாவிடில்

'न तस्य प्राणा उत्क्रामन्ति' 'अत्रैव समवनीयन्ते'

என்ற ச்ருதிக்கும், ப்ரம்ஹமாக ஆவது வேறு தேசத்திற்கு செல்லாமலேயே ஸித்தமானதால் கமனம் உபயோகமில்லை என்ற யுக்திக்கும் விரோதம் வரும், என்று அந்த ஸூத்திரத்திற்கு ஸ்ரீ ப்ரம்ஹாநந்தஸரஸ்வதி ஸ்வாமிகள் வ்யாக்யானம் செய்திருக்கிருர்கள்.[1]

சரீரம் விழுந்த பிறகு ஸ்வஸ்வரூபத்தோடிருக்கிருன். புதிதாக ஒரு தர்மமும் வருவதில்லை.

'अस्माच्छरीरात्समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते स उत्तमः पुरुषः' (छा. ८-१२-३)

என்ற ச்ருதி சரீராபிமானத்தைவிட்ட சுத்தமான ஜீவன் ஸ்வஸ்வரூபத்தோடிருப்பதாக கூறுகிறது. ஆனுல் வித்யையால் அவித்யை நாசமடைந்ததால் காலுஷ்யமொன்றுமில்லை. இங்கு ஜ்யோதி என்பதால் ஆத்மா சொல்லப்படுகிறது. சரீரத்தைவிட்டு பிரித்து ஸாக்ஷாத்காரமடைந்து என்பது 'शरीरात्समुत्थाय' என்பதின் பொருள்.

'परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते'

---

1. 'निर्गुणस्य देवयानगतेः अर्थवत्त्वं-निवृत्तिमत्त्वं-हि यस्मात् अन्यथा निर्गुणस्य गतिमत्त्वे, उभयथा श्रुतियुक्तिभ्यां विरोधः। 'ब्रह्मविद्ब्रह्मैव भवति' 'न तस्य प्राणा उत्क्रामन्ति, अत्रैव समवनीयन्ते' इत्यादिश्रुतिभ्यः, अज्ञाननिवृत्तौ ज्ञानस्य निरपेक्षत्वमिति युक्तेः' (वे. सू. मु. पृ. 175) इति वेदान्तसूत्रमुक्तावलिः ॥



பரஜ்யோதியை அடைகிருன். அதாவது ஸ்வஸ்வரூபத்தோடு அபிவ்யக்தியடைகிருன் என்பது பொருள்.[1] 'मुखं व्यादाय स्वपिति' என்று வழக்கிருக்கிறது. தூங்கும்பொழுது வாய் திறந்திருக்கிறது. வாய் திறந்த பிறகு தூக்கம் வருவதில்லை. ஒரே காலத்திலிரண்டுமிருந்தாலும், திறப்பதற்கு பிறகு தூக்கம் என்னும் அர்த்தத்தில் தாத்பர்யமில்லை யாகுலும் 'व्यादाय' என்று क्त्वा ப்ரத்யயத்தை உபயோகப்படுத்துவதுபோல, இவ்விடம் ஸம்பத்திக்குப் பிறகு என்ற அர்த்தத்தில் தாத்பர்யமில்லை.

அவ்விதம் முக்தியடைந்தவன், யோக சாஸ்திரத்தில் கூறுவதுபோல ப்ரம்ஹத்தைக் காட்டிலும் வேருயிருப்பதில்லை. ப்ரம்ஹமாகவே இருக்கிருன். 'स उत्तमः पुरुषः' என்று பலனைச் சொல்லிய வாக்யத்தில் அவனை உத்தம புருஷனுன ப்ரம்ஹமாகக் கூறியிருக்கிறது. இந்த விபரம்

'अविभागेन दृष्टत्वात्' (ब्र. सू. ४-४-४)

என்ற ஸூத்ரத்தில் கூறப்பட்டிருக்கிறது.

---

1. एककालयोरपि मुखविदारणस्वापयोः क्त्वाप्रत्ययवद्यमप्य-विवक्षितपूर्वकालभावः, न तद्बलात् ज्योतिःस्वरूपशब्दयोर्भिन्नार्थत्वम्। तथाच यत्परं ज्योतिरुपसंपद्यते तत् स्वेन रूपेणाभिनिष्पद्यते इति वाक्यार्थः'। (N. S. ब्र. सू. भा. पृ. 1007) इति कल्पतरुः ॥

வேறு இரண்டுவிதமாகவும் இந்த ச்ருதிவாக்யத்தை பூர்வாசார்யர்கள் வ்யாக்யானம் செய்திருக்கிருர்கள்.

ஆகையால் ஸாக்ஷாத்காரத்தால் அக்ஞானம் முழுவதும் நிவிருத்தியடைந்து ஆவரணமில்லாத நித்ய பரிபூரணாநந்தமாயிருப்பதே மோக்ஷம். இதற்கு ஆசார்யாள்,

'अशरीरत्वं, अमृतत्वं,

என்று ச்ருதியில் சொல்லியிருக்கும் பல பதங்களை உபயோகப்படுத்தியிருக்கிறார்கள்.

ஸகுண ப்ரம்ஹோபாஸனம் செய்தவர்கள் தேவயானம் வழியாக கார்ய ப்ரம்ஹலோகம் சென்று ஞானமடைந்தே ப்ரம்ஹாவுடன் முக்தியையடைகிறார்கள். பிறகு ஸம்ஸார பந்தம் கிடையாது. ப்ரம்ஹமாகவே யிருப்பதே முக்தியின் ஸ்வரூபம்.

ஸ்வாநுபவத்துடன் வேதாந்த சாஸ்திர ஸாரத்தை கவி கல்பனையுடன் அழகாக ஸ்ரீ ஸதாசிவப்ரம்ஹேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள்,

'वैराग्यविपुलमार्गं प्रज्ञानोद्दामदीपिकोद्दीप्तम् ।
आरुह्य तत्त्वहर्म्यं मुक्त्या सह मोदते यतिराट् ॥'

என்று உபதேசிக்கிறார்கள்.

धीराः कुशाग्रधिषणाः भवतः प्रणम्य
मौलौ विधाय करवारिरुहे समीहे ।
वाणीयमर्थरहितापि विशृङ्खलापि
सानुग्रहेण हृदयेन विलोकनीया ॥

॥ शुभम् ॥

புஸ்தகம் கிடைக்குமிடங்கள் :

ஸ்ரீ யஜ்ஞேச்வர சாஸ்திரிகள்,
வேதாந்த பாடசாலை, பழுவூர்
முத்தரசநல்லூர் போஸ்டு, திருச்சி ஜில்

V. ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள்,
64, ஸம்ஸ்கிருத காலேஜ் ரோடு,
மைலாப்பூர், மதராஸ்-4.

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,
ஸ்ரீரங்கம், திருச்சி-6.